முஷாரஃபின்
இரகசிய
ஒப்பந்தம்!



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
30.9.2007 ரூ.8.00
80 பக்கங்கள்





# நீயா... நானா?

-நாடாளும் போட்டி!




**அதிசயமாகிய சினிமா!**

நல்ல படத்தைப் பாராட்டுவதில் கல்கி என்றுமே முன்னிலை வகிக்கும் என்பது மீண்டும் நிரூபணமாகி உள்ளது.

**- ஆ.பிரகாஷ், பொன்மலை**

பாலியல் தொழில் செய்யும் பெண்ணின் மன அழுத்தங்களைப் படம் பிடித்த சினிமாவுக்கு சபாஷ்.

**- எம்.ஜான்சன், கோவில்பட்டி**

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

'அம்முவாகிய நான்' கவர் ஸ்டோரி சும்மா ஜம்முன்னு இருந்தது; இருக்கும்!

**- நா.கற்பகம், திருச்சி**

**தராசு + ஆசிரியர் பக்கம்**

ஒரு கட்சியின் சார்பாகப் போராட்டத்தில் கலந்துகொண்ட சபாநாயகரை 'துணைக் கோணல்' என்ற தராசுவின் சாடல் சரியே!

**- டி.கே.சுப்ரமணியன், திருப்பரங்குன்றம்**

பெண்கள் கேளிக்கைப் பொருளாகவும் விளம்பரப் பொருளாகவும் பார்க்கப்படும் இழிநிலையை ஆசிரியர் பக்கம் அப்பட்டமாக உணர்த்தியது.

**- வானவில் மூர்த்தி, கடலூர்**

**ஸ்ரீலலிதா...**

இறையருளில் இரண்டறக் கலக்க வைத்திருக்கும் நல்ல ஆன்மிகத் தொடர்.

**- மா.பிரசாந்த், குருந்தம்பட்டு**

ஸ்ரீலலிதா ஆன்மிகக் கட்டுரையில் வரும் படங்கள் என் வீட்டுப் பூஜையறையை அலங்கரிக்கின்றன. கட்டுரையோ மனத்தை!

**- ஏ.எஸ். யோகானந்தம், சகலிங்கியம்**



**ஸ்தம்பித்துப் போன...**

மக்களின் ஒட்டுமொத்தக் கோபத்தையும் கொட்டித் தீர்த்தது 'குப்பை பிரச்னை.' 'சிங்காரச் சென்னை' சீரழியும் சென்னையானதைப் படம் பிடித்தது மைத்ரேயன் பேட்டி.

**- எஸ்.ஆறுமுகம், கழுகுமலை**

**- நா. பானுமதி, ஆதம்பாக்கம்**

குப்பை அள்ளுவதுபோல் அதிகாரிகள் பத்திரிகைகளுக்கு போஸ் கொடுக்கலாம். தொடர்ந்து அள்ள முடியாது.

**- உமரி பொ.கணேசன், மும்பை**

## ஸ்பீட் போஸ்ட்

இந்த வாரம் ஆசிரியர் பக்கம் இல்லாமல் போனதும் ஏதோ ஒன்றை இழந்தாற்போன்ற உணர்வு ஏற்பட்டது.

**- எஸ்.ஏ.கேசவன், கழுகாசலபுரம்**

மணற்கொள்ளை குறித்த மருத்துவர் இராமதாஸின் குரல் தி.மு.க.வினருக்குச்

# சும்மா ஜம்முன்னு

**ஓடிவரும் உன்னதம்!**

'ஓடிவரும் உன்னதம்', 'வாருங்கள் பள்ளிக்குச் செல்வோம்' ஆகிய திட்டங்கள் நாடு முழுவதும் பரவ வேண்டும்.

- லெ.நா.சிவக்குமார், சென்னை
- அ.சம்பத், திருவரங்கம்

'அதிகாரிகளைத் தேடி' மக்கள் என்பது போய் 'மக்களைத் தேடி அதிகாரி' என்பது நல்ல முன்னுதாரணம்.

- எஸ். உஷா சுதர்சன், திருச்செங்கோடு
- அனுராதா பாலாஜி, சென்னை - 59

**உள்ளும் புறமும்**

தசரத் மஞ்சியின் செயல் மனிதநேயத்தின் உச்சம்.

- எஸ். கோபாலன், நங்கநல்லூர்

காலர் காதி மக்கள் தசரத் மஞ்சிக்கு கோயில் கட்டிக் கும்பிடலாம்.

- இரா. சாந்தகுமார், திருவள்ளூர்

சிம்ம சொப்பனந்தான்.

- கே.பிரபாலிங்கேஷ், மேலகிருஷ்ணபுதூர்

மணல் கொள்ளையைத் தைரியமாக தட்டிக் கேட்கும் இராமதாஸைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டலாம்.

- பி. சிவா, பாளையங்கோட்டை

**சிறுகதை**

காதல் பொன்மொழிக் கதை இனிய எளிய நடையில் யதார்த்தமாக இருந்தது; ஓவியம் படு சூப்பர்!

- மீனா ரெங்கநாதன், சென்னை
- ஜே.துரைராஜ் சென்னை

'அழுத விழிகள்' ஓர் அன்புப் போராட்டம்.

- இராமநாதன், அண்ணாநகர்

# இருக்கு!



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**த**மிழக மக்கள் கொஞ்சம் குழம்பித்தான் போயிருப்பார்கள். ஒரு பக்கம், 'இன்று புதுக்கோட்டை, நாளை கோட்டை' என்று ஊடகங்களில் பரவலாக விளம்பரம் கொடுத்து புதுக்கோட்டையில் மாநாடு நடத்தி முடித்திருக்கும் விஜயகாந்த்; மற்றொரு பக்கம் புதிதாக சமத்துவ மக்கள் கட்சி என்ற ஒன்றைத் துவங்கி, 'எங்கள் கட்சி ஆட்சிக்கு வரும்; 2011-ல் நானே முதல்வன்' என்று அதிரடியாக அறிவிப்பு வெளியிட்டிருக்கும் சரத்குமார். எம்.ஜி.ஆர். ஆட்சி என்று முன்னவரும் காமராஜர் ஆட்சி என்று பின்னவரும் 'நீயா நானா' போட்டியில் களமிறங்க... அரசியல் களம் சலசலத்துக் கொண்டிருக்கிறது.

'தி.மு.க.வுக்கும் அ.தி.மு.க.வுக்கும் மாற்றான ஒரு சக்தியை மக்கள் விரும்புகிறார்கள். அந்தச் சக்தி நாங்களே' என்று தங்களை முன்னிறுத்திக்கொள்ள இவர்கள் போட்டியில் இறங்கியிருக்கிறார்கள். ஆனால், தி.மு.க.வும் அ.தி.மு.க.வும் பலமிழந்து கொண்டு வருவதற்கான உறுதியான வாதங்கள் எதுவும் இதுவரையில் இல்லை. இதற்கு முன், இந்தக் கட்சிகளுக்கு மாற்று என்ற முழக்கத்துடன் வந்த ம.தி.மு.க.வும், த.மா.கா.வும் காலப்போக்கில் அதே கட்சிகளுடன் கூட்டணி வைத்துக்கொள்ளும் நிலைக்குத் தள்ளப்பட்டது வரலாறு.

2006 சட்டமன்றத் தேர்தலுக்கு வெகுகாலம் முன்னரே சரியான நேரத்தில் கட்சியைத் துவக்கி, ஒரு கட்டுமானத்தை உருவாக்கி தேர்தலைச் சந்தித்தவர் விஜயகாந்த். 234 தொகுதிகளிலும் போட்டியிட்டு, 8.33 சதம் வோட்டுக்களைப் பெற்று, திராவிட இயக்கங்களுக்கு மாற்றாக வருவதற்கு வாய்ப்புள்ளவர் என்ற நம்பிக்கையை மக்களிடம் உருவாக்கினார். ஒரு கட்சி குடும்ப நலனுக்காகவும், மற்றொரு கட்சி தோழிக்காகவும் செயல்படுவதாக தி.மு.க.-அ.தி.மு.க.வை விளாசினார் விஜயகாந்த். ஆனால் காலப்போக்கில் அவரது குடும்பத்தினரின் ஆதிக்கம் கட்சியில் அதிகமாகிவிட்டதென்று கட்சிக்காரர்களின் புலம்பல் சொல்கிறது. 'ஊழல்வாதிகளுக்கு என் கட்சியில் இடமில்லை' என்று சொன்ன விஜயகாந்த், இன்று ஊழல் குற்றச்சாட்டுக்கு ஆளான பொன்னுசாமி, கு.ப.கிருஷ்ணன் ஆகியோரைக் கட்சியில் சேர்த்து பொறுப்பும் கொடுத்திருக்கிறார். சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்ட பல முக்கியப் பிரமுகர்கள் இன்று விஜயகாந்தைவிட்டு விலகிவிட்டார்கள். 'தி.மு.க., அ.தி.

# நீயா...

மு.க.வுக்கு மாற்று சக்தி அவர்தான் என்றால் விருத்தாசலம் தவிர குறைந்தது இருபது இடங்களிலாவது அவர் வென்றிருக்க வேண்டும்' என்று சொல்பவர்களும் உண்டு. 1954-ல் உழைப்பாளர் கட்சியைத் துவக்கிய ராமசாமி படையாச்சி, தனித்துப் போட்டியிட்டு சட்டமன்றத்தில் பத்தொன்பது இடங்களிலும் பாராளுமன்றத்துக்கு இரண்டு இடங்களிலும் வென்றார். இதுபோன்று அழுத்தமான முத்திரை பதித்திருக்க வேண்டாமா விஜயகாந்த் என்று கேள்விகள் இருக்கின்றன. விருத்தாசலத்தில் அடுத்து நடந்த நகராட்சித் தேர்தலிலும் அவர் கட்சியால் வெற்றிபெற முடியவில்லை. ஏன், சமீபத்தில் நடந்த உள்ளாட்சி இடைத் தேர்தல்களில் எந்த இடத்திலும் வெற்றி பெறாதது மட்டுமல்ல; ஒன்பது இடங்களில் டெபாஸிட் இழந்தது தே.மு.தி.க. 'மக்களோடுதான் என் கூட்டணி' என்று சொல்லி வந்த விஜயகாந்த், புதுக்கோட்டையில் ஆளும் கட்சியினரின் பல தடைகளை மீறி பெரிய கூட்டத்தைக் கூட்டி பிரமிக்க வைத்தார் என்பதும் உண்மை.

சவால்விட்டு நிற்கும் சரத்குமார், விஜயகாந்துக்கு அரசியலில் மிக சீனியர். 1996 முதற்கொண்டு பல தேர்தல்களில் தி.மு.க.வுக்காகவும், கடைசியாக அ.தி.மு.க.வுக்காகவும் பிரசாரம் செய்ய தமிழகத்தின் பட்டி தொட்டிகளைச் சுற்றி வந்தவர். அரசியல் ரீதியாகப் பிரிந்து கிடக்கும் ஒரு பெரும்பான்மை சமூகத்தை ஒருமைப்படுத்தி, அதன்மூலம் அரசியல் ஆதாயம் தேட முயற்சிக்கிறார் என்று சரத் மீது குற்றச்சாட்டு உண்டு. ஆனால், இதுவரை கட்சி நிர்வாகத்தில் சமத்துவத்தை நிலைநிறுத்தி வருகிறார் சரத். 'திராவிட' என்ற சொல் இல்லாமல் கட்சி துவங்கும் அளவுக்கு சரத்துக்குத் துணிச்சல் இருக்கிறது. கட்சி துவக்கியபோதே கொள்கை குறிப்பையும் முன்னே வைத்தவர். 'முற்பட்டவர்களில் ஏழைகளுக்குக்கூட ஒதுக்கீடு வழங்குவோம்; தாய்மொழி காப்போம்; பிற மொழி கற்போம்; இலவசங்களுக்கு எதிர்ப்பு' என்று தைரியமாகத் தம் கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார். அதிக மக்களை வாக்குச் சாவடிக்குக் கொண்டு வருவதன் மூலம் தி.மு.க., அ.தி.மு.க.வுக்கு மாற்றான ஒரு வாக்கு வங்கியை உருவாக்க முடியும் என்று நம்புகிறார் சரத். கூடவே தாய்க்குலங்களைக் கவர மனைவி ராதிகாவைக் களமிறக்கும் எண்ணமும் இருக்கிறதாம்.

இவரது கட்சி துவக்கத்துக்குப் பிறகு விஜயகாந்த் கட்சியிலும் இலேசான அதிர்வு தெரிகிறது. அதன்



# நானா?

# விஜயகாந்தோடு காங்கிரஸ் கூட்டு சோனியா கையில்!

விளைவோ என்னவோ, தினசரி ஒரு முன்னாள் அ.தி.மு.க. அமைச்சர், தி.மு.க. பிரமுகர்களின் சொந்தக்காரர்கள் என்று பலரைச் சேர்த்துக் கொண்டு பரபரப்பு கூட்டிக்கொண்டிருக்கிறார் விஜயகாந்த்.

'சரத்குமார் கொஞ்சம் லேட்டாக வந்திருக்கிறார். ஆனால், முன்னரே வந்துவிட்ட விஜயகாந்த் மட்டுமே மாற்று சக்தியாக மக்களின் மனதில் பதிந்துவிட்டார்' என்கிறார்கள் விஜயகாந்த் கட்சிப் பிரமுகர்கள். ''எங்கள் கட்சியிலும் தமிழகம் முழுக்க இருந்து பல பிரமுகர்கள் சேர்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால், அண்ணன் (சரத்) அவற்றை விளம்பரப்படுத்த வேண்டாம் என்று சொல்லிவிட்டார். வரும் ஜனவரியில் பாருங்கள், எங்கள் மாநாடு தமிழகத்தையே கலக்கும்'' என்கிறார்கள் சரத்தின் சமத்துவக் கட்சியினர். இதற்கிடையில் தமிழகத்தில் நடைப்பயணம் சென்று அதிர வைக்கும் திட்டமும் சரத்திடம் இருக்கிறது.

இந்தச் சூழலில் 2011-ல் வரும் சட்டமன்றத் தேர்தலைவிட அதற்கு இரண்டாண்டுக்கு முன்னரே நடக்கப் போகும் பாராளுமன்றத் தேர்தலில் தங்கள் முத்திரையை அழுத்தமாகப் பதிப்பிக்கும் கட்டாயம் விஜயகாந்துக்கும் சரத்துக்கும் இருக்கிறது. 'மக்களோடு கூட்டணி' என்று சொல்லி வந்த விஜயகாந்த் இப்போது கொஞ்சம் மாறியிருக்கிறார்.



★ ஈ.வி.கே.எஸ்.இளங்கோவன்

''மக்களையும் தெய்வத்தையும் நம்பித்தான் நான் நிற்கிறேன் என்று விஜயகாந்த் கூறி வந்தார். அதற்குக் காரணம் தி.மு.க. மற்றும் அ.தி.மு.க.வுடன் கூட்டணி சேராமல் மக்களுக்கு மூன்றாவது வாய்ப்பைத் தரவேண்டும் என்பதுதான். ஆனால் நாடாளுமன்றத் தேர்தலில், மத்தியில் நாங்கள் ஆட்சிக்கு வரும் சாத்தியம் இல்லை. ஆகையால் நமக்கு வேண்டியவர்கள் ஆட்சிக்கு வர பாடுபட வேண்டும். அந்த அடிப்படையில் காவிரி, முல்லைப் பெரியாறு காவிரி விவகாரங்களில் தமிழகத்தின் மீது யார் பரிவோடு செயல்படுவார்கள்; யாருக்கு வல்லமையும் வாய்ப்பும் இருக்கிறது என்பதைப் பார்த்து அந்தக் கட்சிக்கு ஆதரவு அளிப்போம். எக்காரணம் கொண்டும் ஜாதி, மத, ஊழல் கட்சிகளுடன் கூட்டணி இல்லை என்ற அடிப்படை நிலையில் மாற்றமில்லை'' என்கிறார் தே.மு.தி.க.வின் அவைத் தலைவர் பண்ருட்டி ராமச்சந்திரன். காங்கிரஸை மனதில் வைத்தே விஜயகாந்த் கட்சி இப்படிப் பேசுவதாகவும் கருத இடமுண்டு.

ஆனால், சரத்துக்குத் தேர்தல் கூட்டணிகளில் பெரிய ஈடுபாடு இல்லை. ''கூட்டணி என்றால் ஒரு ஆக்கபூர்வமான திட்டத்தின் அடிப்படையில் செயல்பட்டுத் தேர்தலைச் சந்தித்து ஐந்து வருட காலத்துக்கு எந்தவித ஆபத்தும் இல்லாமல் கூட்டணி ஆட்சி நடத்திட வழிவகை செய்ய வேண்டும். இப்போது நடப்பது இடப் பங்கீடுதான். எங்கள் கொள்கைக் குறிப்பிலும் தெளிவாகவே சொல்லியிருக்கிறோம். ஒவ்வொரு மனிதனும் எதற்கும் அரசாங்கத்தை எதிர்பார்க்காமல் தன்னைத் தானே வளப்படுத்திக் கொள்ளும் சூழலை உருவாக்குவோம். மக்களை அதிக அளவில் வாக்குச் சாவடிக்குக் கொண்டு வருவோம். நம்பிக்கையோடு துவக்கியிருக்கிறோம். கடுமையான உழைப்பு காத்திருக்கிறது'' என்று நம்மிடம் சொன்னார் சரத்குமார். 'காமராஜ் ஆட்சிக்கு பாடுபடும் எங்களோடுதான் காங்கிரஸ் கரம் கோக்க வேண்டும்' என்கிறார்கள் சரத் கட்சிப் பிரமுகர்கள்.

ஒரு பக்கம் தி.மு.க., காங்கிரஸை



பலமாக நம்பியிருக்க, மறுபக்கம் இந்த இரண்டு நடிகர்களும் காங்கிரஸ் சிக்காதா என்று காத்திருக்க, காங்கிரஸ் மதமதப்போடு நின்றுகொண்டிருக்கிறது. ''எந்தவித பலமான அரசியல் பின்னணியும் இல்லாமல் ஒவ்வொரு தொகுதியிலும் போட்டியிட்டு குறைந்தபட்சம் பத்தாயிரம் வோட்டுகள் விஜயகாந்த் பெற்றது மிகவும் குறிப்பிடத் தக்கது'' என்கிறார் ஈ.வி.கே.எஸ்.இளங்கோவன். 'காங்கிரஸ், விஜயகாந்தோடு கூட்டணி வைத்துக் கொள்ளும் வாய்ப்பு உண்டா?' என்றால் ''கூட்டணி பற்றியெல்லாம் அன்னை சோனியாதான் முடிவு செய்வார்'' என்று வழக்கம்போல் மேலே கை காட்டுகிறார்!



● பண்ருட்டி ராமச்சந்திரன்.

விஜயகாந்த்தையும் சரத்தையும் காட்டி, தி.மு.க.வை மிரட்டி அதிக எண்ணிக்கையில் தொகுதிகளைப் பெறும் வாய்ப்பும் காங்கிரஸுக்கு உண்டு. பா.ஜ.க. தமிழகத்தில் மற்ற கட்சிகளுக்கு ஒரு சுமையாகப் போய்விடுவதால் அதனுடன் கூட்டணி அமைக்க எல்லா கட்சிகளுமே தயக்கம் காட்டுவதில் வியப்பில்லை. ''நாங்கள் மதச்சார்பற்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டவர்கள்; பா.ஜ.க.வைக் கண்டால் மக்களில் ஒரு பகுதியினருக்குப் பயம் வருகிறதே'' என்கிறார் சரத்குமார்.

**வ**ரும் 2011-ல் ஆட்சியைப் பிடிக்கப் போட்டியிடும் விஜயகாந்தும், சரத்தும் வரும் பாராளுமன்றத் தேர்தலைப் பற்றிக் குழப்பத்தில் இருக்கிறார்கள் என்பதே உண்மை. ஆனால், அந்தத் தேர்தலில் கட்சியின் தாக்கத்தை அடிப்படையாக வைத்தே 2011க்கான கோட்டையைக் கட்ட முடியும்.

– ப்ரியன்

படம்: ஸ்ரீஹரி



**நான் பணத்துக்காக எந்தப் படத்தையும் ஒப்புக்கொள்வதில்லை!**

# கை நழுவிய தேசிய

## மது அம்பாட்டுடன்

மேடை ஏறி மேஜிக் செய்து காட்டி மக்களை மகிழ்வித்துக்கொண்டு இருந்திருக்க வேண்டிய ஒருவர், இன்று தமது கேமரா மூலமாக மாயாஜாலம் நிகழ்த்தி, உலக அளவில் புகழ்பெற்று விளங்குகிறார். பிரபல ஒளிப்பதிவாள ரான மது அம்பாட்தான் அவர். ஏற் கெனவே ஒளிப்பதிவுக்காக மாநில மற்றும் தேசிய விருதுகள் வாங்கியவர் என்றாலும், அண்மையில் 'சிருங்காரம்' என்ற தமிழ்ப் படத்துக்காக இவருக்குச் சிறந்த ஒளிப்பதிவாளருக்கான தேசிய விருது அளிக்கப்பட்டுள்ளது.

பாராட்டு விழாவில் கலந்துகொள் வதற்காகச் சென்னைக்கு வந்திருந்த வரை சந்தித்துப் பேசினோம்.

''கேரளாவின் பாலக்காடு அருகில் உள்ள சித்தூரில் பாரம்பரியமிக்க அம் பாட் குடும்பத்தைச் சேர்ந்தவன் நான். என் தாத்தா நீதிபதியாக இருந்து, பிறகு கேரள அமைச்சரவையில் இடம் பெற்ற வர். என் அப்பா ஒன்பதாவது வயதில் மேஜிக்கில் ஆர்வம் ஏற்பட்டு, சுயமாகப் புத்தகங்கள் படித்து மேஜிக் கற்றுக் கொண்டவர். நானும் என் அப்பாவைப் போல் மேஜிக்கால் ஈர்க்கப்பட்டு கற்றுக் கொண்டேன். படிக்கும் நாட்களில் மேடைகளில் மேஜிக் செய்து, மக்களை ஆச்சரியமூட்டி இருக்கிறேன். பட்டப் படிப்பை முடித்த பிறகு, பூனா திரைப் படக் கல்லூரியில் ஒளிப்பதிவு கோர்ஸ் படித்தபோது இன்ஸ்டிடியூட்டில் என் னுடன் படித்த கேரளாவைச் சேர்ந்த ஷாஜி கருணும், நானும் நெருங்கிய நண்பர்களானோம். படிப்பை முடித்த பிறகு நாங்கள் இருவரும் இணைந்தே படங்களுக்கு இரட்டையர்களாக ஒளிப்பதிவு செய்தோம்.

'ஞாவல் பழங்கள்' என்ற படம்தான் எனக்குத் திருப்புமுனையாக அமைந் தது. அதன்பின் 'அஸ்வத்தாமா', 'சிவி லிண்ட மாதவன்', 'யாரோ ஓர் ஆள்' என மூன்று படங்களில், அடுத்தடுத்து பணியாற்றினேன். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பாணியில் ஒளிப்பதிவு செய் தேன். மூன்றுமே பெரும் பாராட்டுக் களைக் குவித்தன. மூன்று படங்களுக்கு மாகச் சேர்த்து மாநில அரசின் விருது

கிடைத்தது. அந்த வருடத்துக்கான தேசிய விருது ஒரே ஒரு ஓட்டில் கை நழுவிப் போனது.

76-ஆம் ஆண்டில் ஜி.வி.ஐயருடன் அறிமுகம் கிடைத்தது. நான் அவருடன் பணியாற்றிய காலம் என் ஒளிப்பதிவு வாழ்க்கையின் பொற்காலம். 'சங்கரர்', 'மத்வாச்சாரியா', 'ராமானுஜர்', 'பகவத் கீதா', 'சுவாமி விவேகானந்தா' என்று ஐயர், ஆர்ட் டைரக்டர் கிருஷ்ணமூர்த்தி, நான் மூவரும் இணைந்து பணியாற்றிய அனுபவங்கள் மனதுக்கு அபார திருப்தி அளித்தவை. ஒரு காட் சியை டாப் ஆங்கிளில் இந்த மரத்தின் மேலே இருந்து எடுக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே, ஆர்ட் டைரக்டர் கிருஷ்ணமூர்த்தி மரத்தின் மீது ஏறி, அங்கே இருந்து கீழே பார்த்துக் கொண்டிருப்பார்.''



# விருது!

## ஒரு சந்திப்பு!

''நான் பணத்துக்காக எந்தப் படத்தையும் ஒப்புக்கொள்வது கிடையாது. ஒரு படத்தில் ஒளிப்பதிவு செய்ய ஒப்புக் கொள்வதற்கு முன் அதன் டைரக்டரிடம் நிறைய பேசுவேன். இரண்டு பேருடைய சிந்தனை அலை வரிசையும் ஒத்துப் போனால் மட்டுமே பணிபுரியச் சம்மதிப்பேன். அது எழுபத்திரண்டு வயதிலும் சுறுசுறுப்புடன் இயங்கிய ஜி.வி. ஐயரானாலும் சரி, இருபத்திரண்டு வயதில் அமெரிக்காவில் அனைவரது கவனத்தையும் ஈர்த்த மனோஜ் நைட் ஷ்யாமளன் ஆனாலும் சரி'' என்று அழுத்தமாகக் கூறுகிறார் மது அம்பாட்.

2005ஆம் ஆண்டின் சிறந்த தமிழ்ப் படமாக தேசிய விருது பெற்றிருக்கிறது ஆடும் கூத்து. சேரன், நவ்யா நாயர் நடித்துள்ள இந்தப் படத்தின் இயக்குனர் மலையாள இயக்குனரான டி.வி.சந்திரன். மது அம்பாட் இப்படத்தின் ஒளிப்பதிவாளர் மட்டுமல்ல. தயாரிப்பாளர்களும் ஒருவர்.

- கௌதம் ராம்








● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? குடித்துவிட்டு வரும் கணவனை, அடித்து உதையுங்கள் என்று மனைவிமார்களுக்கு டாக்டர் ராமதாஸ் அறிவுரை வழங்குகிறாரே?

! அடித்து உதைத்து வெளியேற்றப்பட வேண்டியது ராமதாஸின் இந்த யோசனைதான். பிரச்னை தீர ஒரு நாளும் உதவாது.

● தர்மன் பெரியசாமி, சென்னை - 19

? ஒரு பக்கம் பூகம்பம், மறுபக்கம் சுனாமி என்று மக்கள் அல்லாடியபோது, அமெரிக்கா இரண்டாண்டுகளுக்கு முன் அணுகுண்டு பரிசோதனை நிகழ்த்தியது. இப்போது ரஷ்யா (தந்தை) குண்டு பரிசோதனை செய்கிறது. மக்கள் என்னதான் செய்ய வேண்டும்?

! ரஷ்ய அதிபருக்கும் அமெரிக்க அதிபருக்கும் ஓர் அன்புக் கோரிக்கை விடுத்துக் கடிதம் எழுதி, அதில் உங்களால் முடிந்த அளவுக்குப் பலரிடம் கையெழுத்து வாங்கி அனுப்பி வையுங்களேன்! ஒன்றும் செய்யாமல் இருப்பதற்கு இது எவ்வளவோ மேல் அல்லவா!

● டி.எஸ்.டி.ராயன், மயிலாடுதுறை

? ரயில்வே பாதுகாப்புப் பணியில் முழுவதும் பெண்களைக் கொண்ட அதிரடிப் படை உருவாகிறதாமே - இது சரியான ஏற்பாடா?

! எந்தப் பாதுகாப்புப் பணியிலும் பெண்கள் ஈடுபடுத்தப்படலாம்; ஆனால் பெண்கள் மட்டுமே ஈடுபடுத்தப்படுவது சரியல்ல. இருக்கிற பிரிவினைகள் போதாதா? ஆண் - பெண் பிரிவினை வேறா?

● ரேவதிப்ரியன், ஈரோடு

? சன் டி.வி.யில் பணியாற்றிய நிறைய பேர் கலைஞர் டி.விக்கு வந்துவிட்டார்களே?

! அந்த ஒரு காரணத்தால் மட்டுமே கலைஞர் டி.வி. வெற்றி பெற்றுவிடாது. கலைஞர் டி.வி. கருணாநிதி டி.வி.யாகிவிடாமல் மெய்யாலுமே கலைஞர்களுக்கான டி.வி.யாக விளங்க வேண்டும்.

● எஸ்.உஷா சுதர்ஷன், திருச்செங்கோடு

? பிற்படுத்தப்பட்டவர்களுக்கான 20 சதவிகித ஒதுக்கீட்டில், கிறிஸ்தவர்களுக்கு

# மத்திய அரசை விமர்சித்து

# நீங்கள் கேட்டவை

★ அவசரப் பேச்சு!

★ கரைந்த பெருங்காயம்!

★ கோடிக் கணக்கு!

3.5 சதவிகிதமும் முஸ்லிம்களுக்கு 3.5 சதவிகிதமும் உள் ஒதுக்கீடு செய்து, தமிழக அரசு அவசர சட்டம் பிறப்பித்துள்ளதே?

! இந்த இரு மதங்களிலும் பிற்படுத்தப்பட்டவர்கள் இருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனாலும் ஜாதி - மத அடிப்படையில் இடஒதுக்கீடு இருக்கும் வரை வசதி படைத்தவர்களே அதிகம் பயனடைவார்கள். வேற்றுமைகள் நீடிக்கும். ஒருமைப்பாடு நிலை குலையும். பொருளாதார ரீதியில் இடஒதுக்கீடு மட்டுமே நற்பயன் தரும்.

● வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி

? இலங்கைத் தமிழர்களுக்கு உதவ வேண்டும் என்று உண்ணாவிரதமிருந்த நெடுமாறனுக்கு, ராமதாஸும் வைகோவும் ஒன்றாகச் சேர்ந்து பழ ரசம் கொடுத்து, விரதத்தைக் கைவிடச் செய்திருக்கிறார்களே - இது எதைக் காட்டுகிறது?

! தமிழீழம் என்கிற காமன் அஜெண்டா அவர்களுக்கு இருப்பதை; அதற்கு முதல்வரின் மறைமுகமான ஆசியும் இருப்பதை!

● சிவ.இராமலிங்கம், ஆத்தூர்

? விஜய டி.ராஜேந்தர், 'இனிமேல் யாருக்கும் பல்லக்குத் தூக்க மாட்டோம்' என்று அறிவித்துள்ளாரே?

! பல்லக்கை இறக்கியவருக்குப் பதவி கொடுத்து சாந்தப்படுத்திவிட்டாரே தி.மு.க. தலைவர்!

● பா.முத்துமாணிக்கம், அலிவலம்

? சரத்குமார் தொடங்கியுள்ள கட்சியில், முக்கிய பொறுப்பில் இருப்போர் எல்லாமே ஒரு ஜாதியினர். அப்படி இருக்க, ஜாதி சார்பற்ற கட்சி இது என்று அவர் சொல்கிறாரே?

! எல்லா ஜாதியினரிடமும் விதி விலக்கின்றி வோட்டு கேட்போம் என்கிற அர்த்தத்தில் சொல்லியிருப்பார்!

● எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்

? தமிழக அரசின் குறைபாடுகளை விமர்சித்துப் போராட்டம் நடத்தும் டாக்டர் ராமதாஸ், மத்திய அரசின் குறைபாடுகளை விமர்சனம் செய்து போராடுவாரா?

! மாட்டார். அவருடைய இன்றைய இலக்கு ஸெயின்ட் ஜார்ஜ் கோட்டை

# போராடுவாரா ராமதாஸ்?




தான்; செங்கோட்டை அல்ல. அதனால் தான் மத்திய அரசில் கட்சிக்குப் பங்கு கேட்டவர், மாநிலத்தில் வேண்டாம் என்று கூறிவிட்டார்!

● **எஸ்.சக்தி, ராஜபாளையம்**

*? தமிழகத்தில் காங்கிரஸ் தலைமையில் மூன்றாவது அணி அமையும் என்கிறாரே இளங்கோவன்?*

! அவசரப்பட்டு இப்படித்தான் அவர் புதுசு புதுசா எதையாவது சொல்லிவிட்டு அப்புறம் சோனியா அம்மாவிடம் வாங்கிக் கட்டிக்கொள்வார்!

● **மல்லிகா அன்பழகன், சென்னை - 78** ★

*? கட்சி ஆரம்பித்து இதுவரை நூறு கோடி ரூபாய் இழந்திருப்பதாக விஜயகாந்த் கூறுகிறாரே?*

! சொந்தப் பணமா, கட்சிப் பணமா என்று சொல்லவில்லையே! இதற்காகத்தான் கட்சிக் கணக்குகளும் 'ஆடிட்'டுக்கு உட்படுத்தப்பட்டு பகிரங்கமாக வெளியிடப்பட வேண்டும் என்பது.

● **ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்**

*? வாக்கு வங்கிகளைக் கைப்பற்ற மு.க. அதிரடி நடவடிக்கைகள் எடுக்கிறாரே?*

! எல்லாம் 'சேது'வில் கரைந்த பெருங்காயம் ஆகப் போகின்றன!

● **எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி**

*? ஈரோடில், கலைஞரை வரவேற்கும் ஒரு விளம்பர பேனரில், அண்ணாவின் இதயத்தில் மு.க. இருப்பதுபோல் ஒரு சித்திரிப்பு அமைக்கப்பட்டுள்ளது குறித்து?*

! கற்பனைத் திறனுக்கு வந்துள்ள கஷ்டகாலம்! பக்தனின் (சிறியவனின்) இதயத்தில்தான் கடவுள் (பெரியவர்) இருப்பதாகச் சொல்வார்கள். தலைகீழாகச் சித்திரித்தால் அனர்த்தம் ஆகிவிடும்.

● **எஸ். திருமலை, கோயம்புத்தூர்**

*? வலுத்த, கொழுத்த, அரசியல் பலம் வாய்ந்த, பணபலம் மிக்க பிரமுகர்களிடம் நீதிமன்றம், தேர்தல் கமிஷன் உட்பட எதுவும் செய்ய முடியாதபடி எத்தனைச் சட்ட ஓட்டைகள்! அதற்கு உதவும் எத்தனை கீழ்த்தரமான மனிதர்கள். இந்நிலையைச் சகிக்க முடியவில்லையே?*

! இதற்கு உங்களுடைய கடிதத்தில் நீங்களே பின்வரும் அருமையான வாசகத்தை முத்திரை பதித்து பதில் கூறியிருக்கிறீர்களே:

Trust in God, work hard. Every situation in life must be faced and so why not face it with love?

● **என்.சண்முகம், திருவண்ணாமலை**

*? "முதல்வர் குடும்பத்தைச் சேர்ந்த குழந்தைகள், மற்றும் உயர் அதிகாரிகளின் குழந்தைகள் படிக்கிற புகழ்பெற்ற பள்ளிக்கூடத்தில் சாதாரணத் தொழிலாளியின் குழந்தையும் படிக்க வேண்டும்" என்கிறாரே ராமதாஸ்...?*

! அப்படி எத்தனைக் குழந்தைகள் படித்துவிட முடியும்? எல்லா பள்ளிகளுமே புகழ்பெற்ற பள்ளிகளாக மாற முயற்சி எடுங்கள் டாக்டர்!

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:
**எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்**

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
**மல்லிகா அன்பழகன், சென்னை**

# சத்தம் போடாதே

சில வருடங்கள் சத்தம் போடாமல் இருந்த டைரக்டர் வஸந்தின் படம்! காதல், வன்முறைக்கு மத்தியில் தமிழ் சினிமா சிக்கித் திண்டாடிக் கொண்டிருக்கும் சமயத்தில், ஒரு ஃபேமிலி த்ரில்லர் கொடுத்திருக்கும் வஸந்துக்கு முதலில் சபாஷ்!

ஆண்மைக் குறைவு என்பது ஜாக்கிரதையாகக் கையாளப்பட வேண்டிய ஒரு சப்ஜெக்ட். அதைப் பொறுப்புடன் செய்திருப்பதோடு, 'ஆல்கஹாலிக் அனானிமஸ்' அமைப்பு பற்றியும் தொடுக்காட்டி, குடிப்பழக்கத்தின் கேடுகளை போதனை வாசனை அடிக்காமல், விறுவிறுப்பாய்ச் சொல்லியிருப்பது சிறப்பு.

பத்மபிரியா, பிருத்விராஜ், நித்தின் சத்யா மூன்று பேருக்கும் மிக அழுத்தமான கதாபாத்திரங்கள். மூன்று பேருமே கேரக்டர்களை உள்வாங்கி, மிக இயல்பாக நடித்திருக்கிறார்கள். பாடல்களில் இளமைத் துள்ளல் (சின்னக்குட்டி செல்லம், போகிறேன்) என்றால், த்ரில்லருக்கு ஏற்ப பின்னணி இசையிலும் யுவன்ஷங்கர்ராஜா தனி ஆவர்த்தனம் செய்திருக்கிறார். அதிரடி படத்துக்கே உரிய ஒளிப்பதிவைத் தந்து மிரட்டியிருக்கிறார் தினேஷ்குமார்.

நண்பனுடன் பத்மபிரியாவைப் பெண் பார்க்க வருகிற நித்தின் சத்யா, 'பெண் ரொம்ப அழகு. நான் பொருத்தமாக இருக்க மாட்டேன்' என்று நண்பன் மறுத்த சூழலில், பத்மபிரியாவை விரும்பி மணக்கிறார். முதலிரவில் சோர்ந்துபோய் தூங்குவது, ஆல்கஹாலிக் அனானிமஸ் கூட்டத்தில் பங்கேற்பது, அவரது பொய்கள், தத்துக் குழந்தை, விவாகரத்து என்று அடுத்தடுத்து படத்தில் பல 'திடுக்'கள். இந்த எதிர்பாராத திருப்பங்களுக்கிடையே ஜாலியாய் கதையை நகர்த்திச் செல்கிறார் பிருத்விராஜ். பத்மபிரியாவின் மாஜி கணவர் நித்தினும், புதுக் கணவர் பிருத்விராஜும் எதிர்பாராது ரயிலில் சந்திக்கிற இடத்தில் இடைவேளை.

அப்புறம் விறுவிறு சுறுசுறு என்று ராஜதானி எக்ஸ்பிரஸ் வேகத்தில் கதை போகிறது. தனியறையில் அடைக்கப்பட்ட பத்மபிரியாவுக்குச் சட்டையில் 'எம்ப்ராய்டரி' போட்டுத்தர ஊசி யார் கொடுத்தது, பத்மபிரியா இறந்துவிட்டதாக எல்லோரும் நினைத்துக் கொண்டிருக்கும்போது, பிருத்விராஜுக்கு அவர் உயிருடன்தான் இருக்கிறார்; அதுவும் நித்தின் சத்யாவிடம்தான் சிறைபட்டிருக்கிறார் என்ற சந்தேகம் எப்படி வருகிறது என்பதெல்லாம் தெளிவாகச் சொல்லப்படவில்லை. ஆனால், இந்த லாஜிக், கதையின் ஓட்டத்தைத் தடை செய்யவில்லை.

– அருந்ததி



# கல்கி



2007 செப்டெம்பர் 30
சர்வஜித் புரட்டாசி 13
மலர் : 66
இதழ் : 9

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

- *பாரதியார்*

## ராமர் பாலத்தைக் காப்பதே பகுத்தறிவு!

**க**ண்ணகி என்கிற சிலப்பதிகாரக் கதாபாத்திரத்தை ஏற்கவும், மதிக்கவும், போற்றவும் தயாராக இருக்கிற கருணாநிதி, ராமாயணத்தை ஆராய்ச்சிக் கூடத்தில் வைத்துக் கூறுபோடுவதில் மகிழ்ச்சி கொள்கிறார். இந்த முரண்பாட்டை மக்கள் கவனிக்காமல் இருந்துவிடப் போவதில்லை.

தி.மு.க.வினர், அவர்களுடைய தனிப்பட்ட கட்சிக் கொள்கையைச் சார்ந்து நின்று திருப்தி கொள்ளட்டும். ஆனால், ராமர் நிஜமாகவே வாழ்ந்தாரா என்கிற ஆராய்ச்சியும் நிருபணமும் இந்தியாவுக்கும், இறையுணர்வுள்ள கோடிக்கணக்கான இந்திய மக்களுக்கும் அவசியம் இல்லை.

உணர்வுபூர்வமாகவும், அதையும் தாண்டிய ஆன்ம தேடலின் முடிவாகவும் விளங்கும் ராம பக்தியையும், நம்பிக்கையையும் எப்பேர்ப்பட்ட சக்தியாலும் அசைக்க முடியாது. எனவே, ராமர் பாலத்தைத் தகர்க்காமலிருப்பதே அறிவுடைமை; பகுத்தறிவும் பட்டறிவும் கூட.

'ராமர் சேதுவைத் தகர்க்கக் கூடாது என்கிற எதிர்ப்பு, சேது சமுத்திரத் திட்டம் தொடங்கி நீண்ட காலத்துக்குப் பிறகு திடீரென எழுந்துள்ளது; பணியைப் பாதியில் நிறுத்துவது பண விரயத்துக்கே வழி வகுக்கும்' என்கிற தி.மு.க. தரப்பு வாதமும் தவறானது.

ராமர் சேது குறித்த ஆட்சேபணை, அந்தத் திட்டம் அறிவிக்கப்பட்ட நிலையிலேயே எழுந்தது. அப்போது அதனைப் புறங்கையால் தள்ளிவிட்டுத் திட்டத்தைத் தொடர்வதில் பிடிவாதம் காட்டியது தி.மு.க. அரசு, மத்திய தி.மு.க. அமைச்சரின் துணையுடன்.






உணர்வுபூர்வமான காரணங்கள் மட்டுமின்றி, இயற்கை சமச்சீர்நிலையின் பாதுகாப்பு, சுற்றுச்சூழல் பாதுகாப்பு போன்றவை பாதிக்கப்படும் என்பதாலும் ராமர் பாலத்தைத் தகர்க்க வேண்டாம் என்று வல்லுநர்கள் குரல் கொடுத்தார்கள். சுனாமி தாக்கியபோது, ராமர் பால அமைப்பு பாதுகாப்பு அரணாக விளங்கி பெருமளவுக்குச் சேதத்தைக் குறைத்தது என்பதைச் சுட்டிக் காட்டினார்கள். பகுத்தறிவுக்கு உட்பட்ட இந்தக் காரணத்தைக்கூட ஏற்க தி.மு.க. அரசு தயாராகயில்லை.

ஆக, இந்த விஷயத்தில் மக்கள் நலனைக் காட்டிலும் அரசியல் சுயநலமே ஆதாரமாக இருந்திருக்கிறது. இந்நிலையில், "பா.ஜ.க.வினர் இவ்விஷயத்தை அரசியலாக்கிப் பெரிது படுத்துகிறார்கள்" என்று குற்றம் சாட்டுவது வேடிக்கை! ராமர் பால விஷயத்தில் பிடிவாதம் காட்டுவது பா.ஜ.க.வுக்கு அரசியல் ஆதாயமாக முடியும் என்கிற அனுபவ அறிவு ஆரம்பக் கட்டத்திலேயே கலைஞருக்கு இல்லாமல் போய்விட்டது ஆச்சர்யமே!

மேலும், இந்திய அகழ்வாராய்ச்சிக் கழகம், உச்சநீதிமன்றத்தில் சமர்ப்பித்த பிரமாண பத்திரத்தை வரைவதில் தி.மு.க. தரப்பில் டி.ஆர்.பாலுவின் அரசியல் தலையீடு, பின்னர் அதனை அமைச்சர் பரத்வாஜ் வாபஸ் பெற்றதில் அரசியல், அம்பிகா சோனி பதவி விலக வேண்டுமென மற்றொரு காங்கிரஸ் அமைச்சர் ஜெயராம் ரமேஷ் குரல் கொடுத்து, பின்னர் அதற்கு மன்னிப்பும் கேட்டதில் அரசியல் என்று இவ்விவகாரத்தை ஆளும் கூட்டணியும் எவ்வளவு அரசியல் பண்ண முடியுமோ பண்ணிவிட்டது!

வோட்டுக் கேட்க வந்தபோது, ஸ்டாலின் கோயில் பரிவட்டத்தை மரியாதையுடன் ஏற்றுக் கொண்ட அரசியல் ஸ்டன்ட்டைத் தமிழகம் மறந்து விடவில்லை. ஆட்சியில் அமர்ந்த பிறகு, அதிகார பலம் தி.மு.க.வின் கண்ணை மறைக்கிறது.

சிறுபான்மையினர் உரிமைகளை மட்டுமின்றி, உணர்வுகளையும் மதிக்கத் தயாராயிருக்கும் பகுத்தறிவு அரசியல்வாதிகள், ஹிந்துக்களின் உணர்வுகளை மட்டும் உதாசீனப் படுத்துவதுடன் கீறிப் புண்படுத்துவது, பிரிவினை உணர்வுகளையே வலுப்படுத்தும்.

மக்களுடைய உணர்வுகளை மதியாத பகுத்தறிவு வாதம் எடுபடாது.

பாபர் மசூதி தகர்ப்பின் பின்விளைவுகளிலிருந்தே நாம் இன்னும் மீளவில்லை. ராமர் பால விவகாரத்தை, அதை விடவும் பெரியதொரு பிரச்னையாக்கிவிடாதீர்கள்! ●



✱ நாடகத்தில் ஒரு காட்சி

# குளத்தங்கரையில் ஒரு கொலை!

**ந**வீன தமிழ் நாடக வரலாற்றில் தவிர்க்க முடியாத பெயர் கூத்துப்பட்டறை. 'பாஞ்சாலி சபதம்', 'பிரகலாத சரித்திரம்' போன்ற பழம்பெருமை வாய்ந்த கதைகளிலிருந்து, தமிழ்ச் சிறுகதைகள் வரை பல அரிய விஷயங்களை, புத்தம் புது வடிவில் மேடையேற்றியிருக்கிறது இந்த அமைப்பு. கூத்துப்பட்டறையின் சமீபத்திய நாடகம் 'வைசக்'.

வைசக், ராணுவத்தில் ஒரு கடைநிலைப் போர்வீரன். அவனுடைய மனைவி மேரி. ஒரு குழந்தையும் வைசக்குக்கு உண்டு. வருமானம் போதாமல் கேப்டனுக்கு முடிவெட்டுவது போன்ற சில்லுண்டி வேலைகளைச் செய்கிறான். ஒரு டாக்டர் செய்யும் ஆய்வுக்கு உதவுகிறான். அந்த டாக்டர் சொன்னபடி, ஆய்வுக்காக வெறும் பச்சைப் பட்டாணியை மட்டுமே சாப்பிடுகிறான். அவனுடைய உடலும் மனமும் தளர்ந்து போகின்றன. இடையில் மேரி, பணத்துக்காகத் தன் உடலை விற்பவள் என்பது அவனுக்குத் தெரிந்துவிடுகிறது. மனம் புழுங்கித் தவிக்கிறான் வைசக். ஒரு நாள் மேரியை ஒரு குளத்தங்கரைக்கு அழைத்துச் சென்று கத்தியால் குத்திக் கொன்றுவிடுகிறான்.

'பதினெட்டு வயதுக்குக் கீழே உள்ளவர்களுக்கும், தாமதமாக வருபவர்களுக்கும் அனுமதி இல்லை' என்ற கண்டிப்பான வாசகங்களுடன் சென்னை அலையன்ஸ் ஃபிரான்சைஸ் வளாகத்தில் மேடையேறியிருக்கிறது இந்த நாடகம்.

'வைசக்'-கில் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய ஓர் அம்சம் காட்சியமைப்பு. ஒரு காட்சியில், மேடையின் பின்னால் இருக்கும் வெண் திரையில் திரைப்படம் ஓடுகிறது. படத்தில், ஒரு குதிரை ஓர் இடத்தில் கட்டப்பட்டு இருப்பது தெரிகிறது. அந்தக் குதிரை புல்லைத் தின்று அசைபோட்டுக் கொண்டிருக்க, அதைப் பார்த்துப் பேசுகிறார் நடிகர். இன்னொரு காட்சியில் மரத்தில் அமர்ந்திருக்கும் குரங்கைக் காட்டிப் பேசுகிறார் . ஒவ்வொரு காட்சிக்கும் ஏற்ப, வெண் திரையில் லொகேஷன்களைக் கொண்டு வருகிறார்கள். வைசக் வீட்டைக் காட்டும்போது சுவரில் ஒரு கடிகாரம் மட்டும் தெரிகிறது. சில காட்சிகளில் வெண்திரை மட்டும்.

'வைசக்', ஜார்ஜ் பச்னர் எழுதிய ஜெர்மன் நாடகம். இதை இயக்கியிருப்பவர் கில் ஆலன் என்ற இஸ்ரேல்காரர். இந்த நாடகத்தை ந.முத்துசாமி, வினோதினி, பாபு மூவரும் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்கள்.

**- பாலு சத்யா**

# டாக்டர் பி.ரவிச்சந்திரன்

**சம்பவம் ஒன்று :**

திருக்கழுகுன்றம் - சிவபெருமான் வேதபுரீஸ்வரராக வீற்றிருக்கும் புகழ்பெற்ற சைவ ஸ்தலம். கழுகுகளாகச் சபிக்கப்பட்ட இரண்டு பேர், அந்தச் சாபம் நீங்கிட இங்கே வந்து ஈசனை வழிபட்டனர். அவர்கள் பிரம்மதேவரின் பிள்ளைகளான சம்பு புத்தன் மற்றும் மாபுத்தன். வேதபுரியாகப் புகழ்பெற்று விளங்கி வரும் திருக்கழுகுன்றத்தில், நூற்றுக்கணக்கான கழுகுகள் வாழ்ந்து வந்தன. ஆனால், இன்று ஒன்றிரண்டு கழுகுகள்தான் அங்கே உயிருடன் இருக்கின்றன.

இந்தியக் கழுகுகளைத் தேடி, கடந்த 1996-ஆம் ஆண்டு நேஷனல் ஜியாகிரபிக் தொலைக்காட்சிக் குழுவினர் இந்தியா வந்தனர். அவர்களின் ஆராய்ச்சியில், ஓர் அதிர்ச்சிகரமான உண்மை வெளிச்சத்துக்கு வந்தது. தொண்ணூறு சதவிகித இந்தியக் கழுகுகள் சிறுநீரகச் செயலிழப்பால் மாண்டுபோன உண்மைதான் அது. கழுகுகளின் சிறுநீரகத்தை முடக்கிய பயங்கரம் எதுவென்று உங்களுக்குத் தெரியுமா? எங்களுக்குத் தெரியும்!

**சம்பவம் இரண்டு :**

சிசெல்ஸ் - பகமை அன்னை பாய் விரித்துப் பள்ளி கொண்டிருக்கும் பல ஒயிலான தீவுகளில் ஒன்று. இங்கே மருந்துக்கும்கூட மின்சாரம் கிடையாது. அப்படியானால் எப்படிச் சமாளிக்கிறார்கள்! இருக்கவே இருக்கின்றன பேட்டரிகள். உலக அளவில் தயாரிக்கப்படும் அனைத்து வகை பேட்டரிகளையும், இங்கே இஷ்டத்துக்கு இறக்குமதி செய்து பயன்படுத்தினார்கள். பயன்பாட்டுக்குப் பிறகு, காலாவதியான பேட்டரிகளைக் கண்ட இடத்திலும் தூக்கி வீசினார்கள். வீசப்பட்ட பேட்டரிகளிலிருந்து கசிந்து, மண் வழியே ஊடுருவிய அந்த இரசாயனம், மொத்த நிலத்தடி நீரிலும் ஜம்மென்று கலந்துவிட்டது. கலந்தவுடன், சிசெல்ஸ்வாசிகள் மத்தியில் சிறுநீரகச் செயலிழப்பு மளமளவென்று அதிகரித்தது.

ஆரம்பத்தில் காரணம் தெரியாமல் கையைப் பிசைந்தது சிசெல்ஸ் அரசாங்கம். பின்னர் குடிநீர் வழியே, குடிமக்களின் சிறுநீரகங்களைப் பதம்பார்த்து வந்த, வில்லங்க இரசாயானத்தின் ஜாதகத்தினைக் கண்டுபிடித்தது. கையோடு, அந்தப் பகீர் இரசாயனத்தால் தயாரிக்கப்பட்ட பேட்டரிகளுக்கு நிரந்தரத் தடைவிதித்தது.

சிசெல்ஸ் தீவை இன்னும் மிரட்டியபடி இருக்கும் அந்தக் கேடுகெட்ட இரசாயனம் கேட்மியம். அதேபோல் திருக்கழுகுன்றம் கழுகுகளை மட்டுமல்ல, மொத்த இந்தியக் கழுகுகளையும் சத்தமில்லாமல் கொன்றொழித்த இரசாயன மருந்தின் பெயர் 'டெக்னோ பெலாக் சோடியம்'. இன்று மனிதர்களுக்கும், கால்நடைகளுக்கும் மருத்துவர்கள் பரிந்துரைக்கும் வலி நிவாரண மருந்துகளில் அதிக ஆதிக்கம் செலுத்தி வருவது இதுதான்.

இப்படி வலி ஊசி போடப்பட்ட மாடுகள் இறந்து போனால், அவற்றை ஊருக்கு ஒதுக்குப்புறமான இடத்தில் போட்டுவிடுவது, நமது தேசம் முழுவதும் இன்னும் நடைமுறையில் இருக்கிறது. இப்படி வெட்டவெளியில் போடப்படும் மாடுகளின் உடல்களைச் சாப்பிட்டே, சிறுநீரகச் செயழிலப்பால் கழுகுகள் அத்தனையும் கண்களை மூடின.

கேட்மியம், டெக்னோபெலாக் சோடியம் மட்டுமல்ல. 'ஆர்சனிக்', 'மெர்க்குரி' எனப்படும் பாதரசம், வாகனங்கள் வெளியிடும் புகையிலிருந்து வெளியேறும் லெட் போன்ற கொடிய நச்சு இரசாயனங்களும், பக்க விளைவுகளை உண்டு பண்ணும் பல வகை மருந்துகளும் (ஆண்டிபயாட்டிக்ஸ்), எங்

**ஜகஜ்ஜால ஜோடி**

**சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்**

**மிரட்டும்**

களது பி.சி.டி. குழல்களின் உறிஞ்சும் அணுக்களையும், அவை வேலை செய்யக் காரணமாக இருக்கும் என்சைம்களையும் தடுத்துவிடுகின்றன. முக்கியமாக எங்களது பைகார்பனேட் தயாரிப்பு பாதிக்கப்படுகிறது. இதனால் இரத்தத்துக்கு நீர் வராமல் வெளியே செல்கிறது. இதன் தொடர்ச்சியாக இரத்தத்தின் தரம் குறைந்து, அதில் அமிலத்தன்மை அதிகரிக்கிறது. இரத்தத்தில் அமிலத்தன்மை அதிகரிக்கும்போது உடலின் அனைத்துப் பகுதிகளுக்குமே பிரச்னை ஆரம்பமாகிவிடுகிறது. முக்கியமாக எலும்புகள் கரைந்து இடுப்புவலி, தோள்வலி, முதுகுவலி, மூட்டுவலிகள் ஏற்படுகின்றன.

எலும்புகள் என்று வரும்போது, வைட்டமின் டி-யின் பங்கு மிகமிக முக்கியமானது. வைட்டமின்-டி நேரடியாக வேலை செய்யாது. சூரிய ஒளி நமது தோலில் பட்டவுடன், தோலில் உள்ள செல்கள், வைட்டமின் டி-யை உற்பத்திச் செய்து கல்லீரலுக்கு அனுப்பி வைக்கும். அங்கே அது வைட்டமின் டி-1-ஆக மாறும். பிறகு டி-1 நேரே எங்களை வந்தடையும். எங்களை எட்டியதும் டி-1யை கேல்சிடிரயால் என்ற ஹார்மோனாக நாங்கள் மாற்றி



# இரண்டு சம்பவங்கள்!

“ பர்தா அணியும் இஸ்லாமிய பெண்களைத்தான் ஆஸ்டியோ போரோசிஸ் என்னும் எலும்புத் தேய்மான நோய் அதிகமாகத் தாக்குகிறது! ”



விடுகிறோம். இந்தக் கேல்சிடிரயால்தான், நீங்கள் சாப்பிடும் உணவிலிருந்து கிடைக்கும் சுண்ணாம்புச் சத்தை உறிஞ்சும் வித்தையைக் குடலுக்குச் சொல்லிக் கொடுக்கிறது. கேல்சிடிரயால் ஹார்மோன் உற்பத்தியில் தடை ஏற்படும்போது, குழந்தைகளுக்கு வாயில் பல் முளைப்பதில், பிரச்னை ஏற்படுகிறது. மேலும் ரீனல்ரிக்கெட்ஸ் எனப்படும் கால்கள் அம்புபோல் வளைந்திருக்கும் பாதிப்பு ஏற்படுகிறது. இரத்தத்தில் காரத் தன்மை குறைவதால் பெண்களுக்குக் கர்ப்பம் நிற்காமல் போய்விடுகிறது. உடல் தோல், சூரிய ஒளியை உறிஞ்சமுடியாத நிலையில், பர்தா அணியும் வளைகுடா நாடுகளைச் சேர்ந்த இஸ்லாமியப் பெண்களை ஆஸ்டியோ போரோசிஸ் எனப்படும் எலும்புத் தேய்மான நோய் தாக்குகிறது.




இத்தனை வருடங்களாகக் கிராமத்தில் இருந்த வரை, எங்களின் ராமுக்கு எந்தப் பிரச்னையும் இல்லை. ஆனால், மாநகருக்கு வந்துவிட்ட சில ஆண்டுகளிலேயே நாங்கள் இருவரும் வேலைப் பளுவாலும், இரசாயனங்களின் படையெடுப்பாலும் எங்களின் பி.சி.டி. குழாய்களின் உறியும் பணியை அடிக்கடி நிறுத்த வேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்பட்டோம்.

அமிலத்தன்மை அதிகமுள்ள குளிர் பானங்களையும், பீர் மற்றும் மது பானங்களையும் குடிக்கும்போது, இரண்டு செண்டிமீட்டர் அளவே உள்ள, எங்களது பி.சி.டி.க்கள் அதிகவேலை பளுவைச் சந்திக்க முடியாமல் திணறுகின்றன. இதனால் பி.சி.டி.யின் வேலையை நாங்கள் நிறுத்தி வைக்கிறோம். இப்படி நாங்கள் நிறுத்தி விடுவதால் நீர் மற்றும் தாதுச் சத்துக்களை உறிஞ்ச முடியாமல் எங்களின் ராம் போன்றவர்களுக்கு, அடிக்கடி சிறுநீர் கழியும் உபாதையில் சென்று முடிகிறது. பி.சி.டி.க்கள் செயல்திறன் இழக்கும்போது உடலுக்குத் தேவையான நீர் மற்றும் சத்துக்களும் சிறுநீர் வழியே உடனுக்குடன் வெளியேறி விடுகின்றன.

எங்களின் பி.டி.சி.கள் செயல்திறன் இழப்பது குளிர்பானம் பீர், மதுபானங்களால் மட்டுமல்ல. இரசாயன உப்புக்கள் கலந்த உணவு, குடிநீராகப் பயன்படுத்தும் மாசுபட்ட நிலத்தடிநீர், இரசாயன உரங்கள் மற்றும் பூச்சிக்கொல்லிகளைப் பயன்படுத்தி உற்பத்திச் செய்யப்படும் உணவுப் பொருட்கள், காற்று மாசு என அடுக்கிக் கொண்டே போகலாம்.

இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் சுமார் பத்துகோடி டன்கள் இரசாயனம் உற்பத்தி ஆகிறது. இவை அனைத்தும் வெவ்வேறு வழிகளில், நம்முடைய நீர் ஆதாரங்களான குளம், ஏரி, கால்வாய், ஆறுகள், நதிகளில் கலக்கின்றன. இதனால் நிலத்தடி நீரிலும் தங்களின் கொடிய ஆக்கிரமிப்பை இரசாயனங்கள் கட்டமைத்து விடுகின்றன.

இந்த இடத்தில், சுத்திகரிக்கப்பட்ட குடிநீரைத்தானே காசு கொடுத்து வாங்கி நாங்கள் குடிக்கிறோம் என்று கேட்கலாம். சுத்திகரிக்கப்பட்டுச் சந்தையில் விற்கப்படும் தண்ணீரில் நிலத்தடி நீரை வந்தடைந்த நச்சு இரசாயனங்கள் இருக்குமா? இருக்காதா?

மதுபானங்களைக் குடிக்கும்போது 2 செ.மீ. அளவே உள்ள எங்களது பி.சி.டி-க்கள் அதிக வேலைப் பளுவால் திணறுகின்றன!



## பித்ரு தோஷ நிவர்த்தி - பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில்

# மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் 10.10.2007 அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

மூதாதையருக்கு திதி செய்ய மறந்தவர்களுக்கும், திதி-தர்ப்பணம் செய்யத் தவறியவர்களுக்கும் பித்ரு கடன் நிறைவேற்ற ஏற்ற காலம் மஹாளயபக்ஷ அமாவாஸையே! மஹாளயபக்ஷ அமாவாஸையில் அன்னதானம், வஸ்த்ரதானம் செய்வதால் பித்ருக்களுக்குப் பூரண திருப்தி ஏற்பட்டு அவர்கள் தம் சந்ததிகளுக்கு பூரண ஆயுள், நல்ல ஆரோக்கியம், தர்ம சிந்தனையும் ஆரோக்கியமும் உள்ள சந்ததிகள், செல்வவளம், நிம்மதி, குறைகளில்லாத வாழ்க்கை ஆகியவற்றை அளிக்கிறார்கள். பல பிறவிகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் வினைகளும் இப்பிறவியில் ஏற்பட்ட வினைகளும் விலகி ஆனந்தமும் நல்வாழ்வும் கிடைக்கின்றன. ஆகவே, இராமேஸ்வரம் போன்ற புனித க்ஷேத்திரங்களில் அன்னதானம் செய்து மகத்தான பலனைப் பெறலாம்.

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் என்றென்றும் அழியாத பலனைக் கொடுக்கும்.

*இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலனும் ஒருசேர கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் பிராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான்.*

**★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.**

★ *சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.*
★ *ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் 6 மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.1001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் 1 வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு, நித்ய பூஜைக்கு உதவிடும் தினசரி வழிபாட்டு* **ஸ்தோத்திரங்கள்** *புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.*
★ **ரூ.1001, ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட வெள்ளி டாலர், ஸ்வாமி படம் மஹாளயபக்ஷ அமாவாஸைக்குப் பின்னர் பிரஸாதத்துடன் அனுப்பி வைக்கப்படும்.**

மஹாளய காலங்களில் பித்ரு லோகத்தில் உள்ள முன்னோர்களாகிய பூர்வ புருஷர்கள், யமதர்ம ராஜனின் அனுமதி பெற்று பூலோகத்திற்கு வந்து, தாமே விரும்பித் தம் சந்ததியினர் கொடுப்பதை முழுத் திருப்தியுடன் ஏற்றுக் கொள்வார்கள் என்று சாஸ்திரங்கள் கூறுவதால் வஸ்த்ர தானமும் செய்வது சிறப்பு. வஸ்த்ர தானம் செய்ய விரும்பும் அன்பர்கள் ஒரு வேஷ்டி, துண்டு, ஒரு புடவை, ரவிக்கைக்கான தொகை ரூ. 250 சேர்த்து ரூ. 751 அனுப்பினால் அவர்கள் சார்பாக அன்னதானம், வஸ்த்ர தானம் செய்து பிரஸாதம் அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் **CHEQUE/D.D./M.O.** மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனிதமான அன்னதான ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

# கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, RAGAM APTS., I AVENUE ROAD, THIRUVALLUVAR NAGAR,**
**THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**
**☎: (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300, 94451 27500**

மஹாளயபக்ஷ அமாவாஸைக்கு நேரில் வர விரும்புபவர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.

# காதல்

**காதல் என்பது தும்மல் போன்றது எப்பவும் வரலாம்!**

**-ஜார்ஜ் ஹெர்பர்ட்**

"மூத்தம் கொடுக்கலாம் போல அழகான மூக்குப்பா உனக்கு! ஒரு பொண்ணுக்கு இருக்க வேண்டிய கண்ணு, மூக்கு, உதடு எல்லாம் அம்சமா அமைஞ்சிருக்கு சத்யா!'' - இப்படி ஒரு பெண், ஆணிடம் சொன்னால் அவர்கள் உறவு என்னவாயிருக்கும்; காதல்தானே?

அதுதான் இல்லை! எனக்கும் ரேகாவுக்கும் இடையே இருப்பது நட்புதானாம்!

அவள் அப்படித்தான் நினைக்கிறாள். ஆனால், நான் அப்படியில்லை. எனக்குள் கள்ளம் இருக்கிறது!

ஆனால், அவளிடம் கேட்டுப் பாருங்கள். ''சத்யனா? அவன் ஒரு ஜெம் அஃப் எ பர்ஸன்! நட்புக்கு அவன் ஒரு நல்ல உதாரணம்'' என்பாள்.

இப்போதுகூட பாருங்கள். ரேகாவைச் சந்தித்து இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன. நான் வேலை பார்க்கும் வாரப் பத்திரிகையின் கருத்துக் கணிப்புக்காக ஊர்ஊராகச் சுற்றித் திரிந்துவிட்டு இப்போதுதான் ரயிலில் வந்து இறங்கினேன். சென்னையைத் தொட்டதுமே மனம் பரிதவிக்க ஆரம்பித்துவிட்டது. 'ரேகாவை இப்பவே பார்க்கணும்' என்று.

ரேகா வேலை பார்ப்பது ஓர் இணையப் பத்திரிகையில். இரண்டு பேருமே ரிப்போர்ட்டர் என்பதால் அவரவர் பத்திரிகைக்காகச் செய்தி சேகரிக்கச் சென்று, பல விழாக்களில் தொடர்ச்சியாகச் சந்தித்துதான் எங்களுக்குள் நட்பு உருவானது.

அவள் ஆபீஸ் இருப்பது பெசன்ட் நகரில். இப்போது மணி ஐந்து. ஆறுமணிக்கு அவள் ஆபீஸை விட்டுக் கிளம்பி விடுவாள்.

சென்ட்ரல் ஸ்டேஷன் விட்டு வெளியே வந்தேன். கை தட்டலுக்கு வந்த ஆட்டோவில் ஏறினேன்.

''பெசன்ட் நகர் போப்பா!''

ரேகாவின் சிந்தனை எப்போதுமே வித்தியாசமானது!

''ஆண், பெண் நட்புங்கறது ரொம்ப உன்னதமான உறவு சத்யா. ரொம்ப அழகான, ஆழமான ஃபீலிங் அது. காதல்கூட சிலதைக் கட்டுப்படுத்தும். பொஸஸிவ் உணர்வு தலைவிரிச்சு ஆடும். அதே போல பெண்களுக்குள்ளே இருக்கிற நட்பில் பொறாமை அதிகம். ஆண்களுக்குள்ளே ஏற்படற நட்புல 'நீ பெரியவனா, நான் பெரியவனா?'ன்னு கர்வம் தலை தூக்கும். இது எதுவும் இல்லாத நட்பு, ஆண்-பெண் நட்பு மட்டும்தான். ஆனா, இதை யாருமே சரியாப் புரிஞ்சுக்கலை சத்யா. ரொம்ப கொச்சைப்படுத்திடறாங்க!''

எங்கள் நட்பின் ஆரம்பகட்டத்திலேயே அவள் சொன்ன வார்த்தைகள் இவை. இப்போது சொல்லுங்கள், இவளிடம் என் காதலை எப்படி வெளிப்படுத்த முடியும்? ஆனாலும் சொல்லித்தான் ஆகவேண்டும்.



■ **உமா சம்பத்**

# ஒத்திகை!

''சார் பெசண்ட் நகர் வந்துட்டோம்!''

பணத்தைக் கொடுத்து ஆட்டோவை அனுப்பிவிட்டு, நான் ரேகாவின் ஆபீஸ் நோக்கிச் செல்லவும் அவளே ஆபீஸ்விட்டு வெளியே வரவும் சரியாக இருந்தது.

''ஹேய் சத்யா! நீ...நீ...''

எப்ப வந்தே? ஏன் வரப்போறதை எனக்குச் சொல்லலை? ஒரு போன்கூட பண்ணலையே நீ! இப்பத்தான் வந்தியா? போன வேலை சக்ஸஸ்ஃபுல்லா முடிஞ்சுதா?''

''இருப்பா... இரு! இரு! மூச்சு விட்டுக்கோ! ஹோட்டலுக்குப் போய் ஏதாவது கொறிச்சுக்கிட்டே பேசலாம்!'' என்றேன்.

'ம்! ஹோட்டலுக்கா?' அழகாகத் தலைசாய்த்து யோசித்தவள், ''எதுவும் வேண்டாம். பீச்சுக்குப் போலாம் வா!'' என்றாள்.

கடற்காற்று ரேகாவின் கூந்தலோடு சடுகுடு விளையாடியது.

முழங்கால்களில் முகத்தை முட்டுக் கொடுத்து உட்கார்ந்துகொண்டாள்.

''என்ன ரேகா, எதுவும் பேசாம மௌனமாயிருக்க?''

''உள்ளுக்குள்ளே நிறைய பேசி வாதம் பண்ணிக்கிட்டிருக்கேன்



**காதல் பொன்மொழிக் கதை–9**

சத்யா!''

''என்னன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''நாம முதன்முதல்ல சந்திச்சப்ப நீ டார்க் பிரவுன்ல பேண்ட்டும், சந்தன கலர்ல ஷர்ட்டும் போட்டிருந்தே! கரெக்டா சத்யா?''

''ஞாபகமில்லை! எதுக்குக் கேட்கறே?''

''ஒருமுறை என்னைப் பார்க்க வந்தப்ப, ஆபீஸ்கிட்டே வண்டி ஸ்கிட்டாகி கீழே விழுந்து கால் கட்டைவிரல் நகம் பெயர்ந்துடுச்சி. டாக்டர் கிட்டே போய் கட்டுப் போட்டுக்கிட்டு வந்தோம். ஞாபக மிருக்குதா என்னைக்குன்னு.''

''சம்பவம் ஞாபகமிருக்கு. தேதி தெரியலை!''

''போன வருஷம் டிசம்பர் 12-ம் தேதி. அன்னைக்கு வெள்ளிக்கிழமை! கிழமை எப்படிச் சொல்றேன்னா, அன்னைக்கு நெத்தியில அழகா சின்ன கீற்றலா விபூதி இட்டு குங்குமம் வெச்சிருந்தே. கோயிலுக்குப் போயிட்டு வந்தேன்னு சொன்னே. அன்னைக்கு மறு நாள்தான் உனக்கு பர்த்டே!''



''தலைவர் டாக்டரிடம் என்ன சத்தம் போடுகிறார்?''

''டாக்டர் வாயைத் திறக்கச் சொன்னா, 'எதையும் ரிப்பன் கட்டித்தான் திறப்பேன்'னு தலைவர் அடம்பிடிக்கிறாராம்.''

-எம்.அசோக்ராஜா

''சரி! இதென்ன மலரும் நினைவுகள்?'' என்றேன். ஆனால், எனக்கு ஏதோ புரிவது போலிருந்தது. 'அது' அதுவாகவே இருக்க வேண்டுமென மனம் பிரார்த்தித்தது.

''இந்தப் பிராண்ட் சிகரெட்தான் சத்யா ஸ்மோக் பண்ணும். சத்யாவுக்கு இந்த ஷர்ட் நல்லாயிருக்கும். இந்த விளம்பரத்தைத்தான் சத்யா கிண்டல் செய்யும். ராத்திரியில இந்த ஸாங் கேட்டா சத்யா மெய் மறந்து போயிடும்'னு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நிமிஷமும் நான் எதுக்கு சத்யா உன் நினைவாவே இருந்தேன்? இதுக்கு என்ன அர்த்தம்?''

''ரேகா... நீ வந்து... நீ சொல்றது...!''- புரியாததுபோல் திண்டாடினேன்.

''உங்களுக்குப் புரியலையா சத்யா? எனக்குப் புரிஞ்சிடுச்சு. என் மனசு என்னையும் அறியாம எப்பவோ உங்களை நேசிக்க ஆரம்பிச்சுடுச்சு! எஸ்! ஐ லவ் யூ சத்யா! என்னையே நான் இப்பத்தான் உணர்றேன். திடீர்னு உன்னைப் பார்த்த நிமிஷம் மனசைப் பிளந்துகிட்டு என் காதலை எனக்குப் புரிய வெச்சிடுச்சு. கடைசியில் என் மனசும் இப்படித்தானான்னு எனக்கே சங்கடமாயிருக்கு. ஆனா, இதை மறைச்சி வேஷம் போட விரும்பலை. இனிமே நீங்கதான் சொல்லணும் சத்யா!''

''நானும் உன்னை மனதாரக் காதலிக்கிறேன் ரேகா'' என்று சொல்லி அவளை அள்ளி அணைத்துக்கொள்ள, உடலின் சகல நரம்புகளும் துடிதுடிக்க, சிரமப்பட்டு அடக்கிக் கொண்டேன்.

என் முகத்தில் ஒரு திடுக்கிடலைக் கொண்டு வந்தேன். தேர்ந்த நடிப்போடு ஒரு சங்கட உணர்வைக் கண்களில் மிதக்கவிட்டேன்.

''ரேகா, எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலை... நான்... நான்... நாளைக்கு என் பதிலை சொல்றேனே! இப்ப புறப்படுவோமா?''

இருவரும் கிளம்பினோம். ரேகாவின் முகம் சற்று வாடியிருந்தது. மனதுக்குள் சிரித்துக் கொண்டேன். நான் அனுபவித்த நரக வேதனையை ரேகாவும் அனுபவிக்கட்டும். சிரிப்பாக வந்தது.

மறுநாள், வழக்கத்தைவிட முன்னதாக ஐந்து மணிக்கே கடற்கரைக்குச் சென்றவன், இன்ப அதிர்ச்சியில் மூழ்கினேன். ரேகா

எனக்கும் முன்னதாக வந்து காத்திருந்தாள்.

''என்ன ரேகா பர்மிஷனா?''

''இல்லை. ஹாஃப்டே லீவ்! மத்தியானமே வந்துட்டேன்!''

அவளின் பதில் எனக்கு அதிர்ச்சியாக இருந்தது!

''மத்தியானமா? ஓ காட்! பைத்தியமா உனக்கு! எனக்கு ஒரு ஃபோனாவது செஞ்சிருக்கலாமில்லே!''

ரேகா பதிலே சொல்லாமல் மெல்லிய கோடாக ஒரு புன்னகையைத் தந்தாள்.



**ஆறு மணிக்கு நமது பழைய இடத்துக்கு வந்து காத்திரு. உன் மூக்கைத் திருக வேண்டும்!**

''சரி, முதல்ல நம்ம விஷயத்துக்கு வருவோம். ராத்திரியெல்லாம் நான் தூங்கவே இல்லை ரேகா. யோசிச்சதிலே..''

''ப்ளீஸ், எதுவும் சொல்லாத சத்யா!''- இடைமறித்தாள் ரேகா.

''ஏன் ரேகா?''

''என்னை மன்னிச்சிடுங்க சத்யா. உங்க பதில் எதுவானாலும் அதைத் தெரிஞ்சுக்க வேணாம்னு நினைக்கிறேன்! நேத்து நான் என் மனசைத் திறந்து சொன்னதுமே வேற எந்த ஆணாயிருந்தாலும், புல்லரிக்கப் போய், உடனே அவனும் பதிலுக்கு 'ஐ டு லவ் யூ'ன்னு சொல்லியிருப்பான். ஆனா, நீங்க அப்படிச் செய்யல. இதுக்கு மேல இப்ப என் மனசுக்குச் சாதகமான பதிலைச் சொன்னாலும் அது ஒரு ராத்திரியில வலிய வரவழைச்சுக்கிட்ட காதலாகத்தான் இருக்கும். அந்தக் காதல் பிச்சை எனக்கு வேண்டாம் சத்யா.''

''ரேகா நான் சொல்றதை முழுசாக் கேள்!''

''ப்ளீஸ் சத்யா! எதுவும் சொல்லி என்னை பலவீனப்படுத்தாதீங்க. என் மனசுல இப்படி ஓர் எண்ணம் ஏற்பட்டு கட்டுப்பாடு இழந்த பிறகு இனிமேல் நட்பா பழகுற அருகதையும் எனக்கு இல்லை சத்யா! இதுவே நம்மோட கடைசி சந்திப்பு. குட்பை!'' சொன்னாள்; எழுந்தாள்; நடந்தாள். சுவடுகளை அழுத்தமாகப் பதித்தபடி செல்பவளைத் தடுக்க என்னிடம் வார்த்தைகள் இல்லை... கண்ணீர்தான் மிச்சமிருந்தது!

இரண்டு மாதங்கள் கழித்து ஒரு நாள் நான் ஈ மெயில் செக் பண்ணிக் கொண்டிருந்தபோதுதான் ரேகா அனுப்பியிருந்த அந்தக் கடிதம் தட்டுப்பட்டது.

சத்யா ராஸ்கல்,

உனக்குத் தெரியுமா? நீ கருத்துக் கணிப்புக்காக ஊர் சுற்றச் சென்றிருந்த போது, அவசரமாக ஒரு புத்தகம் தேவைப் பட்டதால் உன் அறைக்குச் சென்றேன். அப்போதுதான் அங்கு உன் டைரியை நான் படிக்க நேர்ந்தது. என் மீது வைத்திருந்த காதலை வெளிப்படுத்த முடியாமல் நீ மனதுக்குள்ளேயே தவித்துக் கொண்டிருந்தது தெரிய வந்தது.

டயரியில் உன் புலம்பலைப் படித்த போது இந்த ஜென்மத்தில் காதலை வெளிப்படுத்த உனக்குத் தைரியம் வராதென்று தெரிந்துகொண்டேன். அதனால் தான் நானாகவே என்னை வெளிப்படுத்தினேன்.

ஆனால் பாவி, நான் எதிர்பார்க்கவேயில்லை! மனதில் எதுவுமே இல்லாதவன் போல் எப்படி நடித்தாய்! அதனால்தான் மறுநாள் நான் பதில் ஷாக் கொடுத்தேன். இந்த இரண்டு மாதமும் தாடி வளர்த்து தவித்தாய்தானே? ஓ.கே. தண்டனைக் காலம் முடிந்துவிட்டது. மரியாதையாக மாலை ஆறு மணிக்கு நமது பழைய இடத்துக்கு வந்து காத்திரு. உன் மூக்கைத் திருக வேண்டும்.

இப்போதும் எனக்குக் கண்ணீர்தான் வந்தது. ஆனந்தக் கண்ணீர்! ●



● பி.சிவா, பாளையங்கோட்டை

***இந்தக் காலத்தில் பதினாறு குழந்தை பெற்று 'பெரு வாழ்வு' வாழ முடியுமா..?***

ஒரு குழந்தையைப் பெத்துக்க எப்படியும் ஒரு வருடம் தேவை. ஆக ஒரு குழந்தைக்கு இரண்டு வருடம் என்ற கணக்கு வைத்துப் பார்த்தால், நீங்கள் சொன்ன பதினாறு குழந்தைகள் பெத்துக்க முப்பத்திரண்டு வருடங்கள் ஆகும். இருபத்தெட்டு வயதில் இந்த வம்ச விருத்தியை ஆரம்பித்த கணவனுக்குப் பதினாறாவது குழந்தை பிறக்கும்போது அறுபது வயதாகி விடும். இந்தக் கணக்கை வைத்துப் பார்த்தால், அவன் வாழ்க்கை 'பெரு-வாழ்வுக்கு' பதில் எப்போதும் குழந்தை 'பெறும்-வாழ்வாக' போய்விடும்.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

***'சிவாஜி' என்றதும் உங்கள் ஞாபகத்துக்கு வருபவர் மராட்டிய மன்னரா, நடிகர் திலகமா, சூப்பர் ஸ்டாரா?***

ஆனைமுகன் - ஆறுமுகன் அப்பன் 'சிவாG'. G for God.



● என்.சண்முகம், திருவண்ணாமலை

***பாரதியார் - வள்ளலார், இருவரிடமும் நீங்கள் கண்ட தனிச் சிறப்பு?***

வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடி, அவற்றைக் கண்ணீரால் துளிர்க்க வைத்த கருணைக் கடல் வள்ளலார்; வறுமையில் வாடியபோதும், விடுதலைப் பசி தீர 'பாடிய பயிர்' பாரதியார்.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

***எது சொர்க்கம்? எது நரகம்?***

செத்து ஒருவன் வானுலகம் சென்றான். அங்கு அவனுக்கு அருந்த அமிர்தம், அசந்து உறங்க அம்சதுளிகா மஞ்சம், அணைத்து மகிழ அழகிகள் ரம்பா-ஊர்வசி-மேனகா, அள்ளி அள்ளி உண்ண அறுசுவை உணவு என்று சந்தோஷத்தில் திக்குமுக்காட வைத்தார்கள். இந்த இராஜ உபசாரம் தினமும் தொடர்ந்தது. ஆறே மாதத்தில் அவனுக்கு, அமிர்தம் வாந்தியை வரவழைத்தது. அழகிகளின் அணைப்பு தீயணைப்பாய்ச் சுட்டது. அம்சதூளிகா-மஞ்சம் அம்புப் படுக்கையாய்க் குத்தியது. ''அய்யோ போதும் என்னை நரகத்துக்குக் கொண்டு விடுங்கள்' என்று அலறினான். அங்கு வந்த அதிகாரி ''அண்ணே, நீ இப்போது இருப்பது நரகத்தில்தான். நீ செய்த









பாவத்துக்கு இந்த உபசாரங்கள் இன்னும் ஒரு மாமாங்கம் தொடரும்'' என்றார். ''அப்போ எது சொர்க்கம்'' என்று நம்மாள் கேட்க, ''நீ வந்ததே பூமி என்கிற சொர்கத்திலிருந்து தான்'' என்று நக்கலாகச் சிரித்த வண்ணம் சொன்னார் அந்த அதிகாரி.

● ஆர்.கே.கௌரி,
சென்னை - 2

***பிள்ளையார் பிடிக்க அனுமாராய் மாறியது. என்ன அர்த்தம் சொல்வீர்கள்?***

பிள்ளையார் என்றதும் நம் நினைவுக்கு வருவது யானைத் தலை. அனுமார் என்றால் அவரது வால். எந்தக் காரியத்தையும் செய்வதற்கு முன்பு அது வெற்றி அடையுமா என்ற கவலை

## பெற்று பெருவாழ்வு வாழ முடியுமா?

யில், நாம் 'செய்யலாமா? வேண்டாமா?' என்று மனதுக்குள் ஒரு Head of Tails போட்டுப் பார்ப்பது வழக்கம். இந்தக் கவலையை விட்டொழித்துக் காரியம் துவங்கும் முன் 'பிள்ளையார் தலை என்ற Head (அ) அனுமார் வால் என்கிற Tail-ஐ நினைவில் நிறுத்தினால் நிச்சயம் வெற்றிதான்.

● வ.சுகுமாரன், வால்பாறை

***புண்ணியத்தைச் சம்பாதிப்பது எப்படி?***

சம்பாதித்த பாவத்தைச் செலவழித்து!

கிரேஸியைக் கேளுங்கள் கிரேஸியைக் கேளுங்கள் கிரேஸியைக் கே

சுதா சேஷய்யன்

# சௌபாக்கியம்

## ஸ்ரீ லலிதா - இரண்டாம் பாகம் 3

### கமலாம்பிகை

முத்துஸ்வாமி தீக்ஷிதர் பெரிய அம்பாள் உபாஸகர்; பக்தர்.

அம்பாள் நவாவரணத்துக்கு நடுவிலே எப்படி வீற்றிருக்கிறாள் என்பதை, திருவாரூர் கமலாம்பாளைப் பார்த்து நவ ஆவரண கீர்த்தனைகளைப் பாடினார்.

நவாவரணம் என்பதை நவ-ஆவரணம் என்று பிரிக்க வேண்டும். பல சமயங்களில் நவா-வர்ணம் என்று பிரிக்கிறோம். பாட்டோடு சம்பந்தப்பட்டிருப்பதால் வர்ணம் என்று நினைத்துக்கொண்டு அப்படிச் செய்கிறோம். வர்ணம் இல்லை அது; ஆவரணம். ஆவரணம் என்றால் கோட்டை அல்லது சுற்று என்று அர்த்தம். அம்பாள் நடுவிலே இருக்கிறாள். அவளைச் சுற்றி ஒன்பது சுற்றுகள் அல்லது ஆவரணங்கள் இருக்கின்றன. இந்த ஒன்பது ஆவரணங்களையும் தாண்டித்தான் அம்பாளை அடைய முடியும். வெளியே இருக்கிற ஆவரணங்களையெல்லாம் சுற்றிச்சுற்றி வந்து, நடுவிலே ஸ்ரீபுர தலைவியாக இருக்கக் கூடியவளை அடைய வேண்டுமென்றால், அவற்றையெல்லாம் தாண்டிப் போக வேண்டும். அப்படித் தாண்டிப் போக வேண்டிய ஆவரணங்களைப் பற்றிய கீர்த்தனைகளை இயற்றியவர் முத்துஸ்வாமி தீக்ஷிதர். அவர் இந்தக் கீர்த்தனைகளைப் பாடியபோது, அம்பாள் கால் மேல் கால் போட்டு அமர்ந்துகொண்டு கேட்டாளாம்.

திருவாரூர் கமலாம்பாளுடைய திருமேனி ரொம்ப அழகான திருமேனி. அம்பாள் கால் மேல் கால் போட்டுக் கொண்டு அந்தத் திருத்தலத்திலே இருப்பதுபோல வேறு எங்கேயும் பார்க்க முடியாது. அந்தக் கோலத்துக்கே சிவராஜ யோகம் என்று பெயர். அம்பாள், யோக நிலையிலே இருப்பதாகக் கணக்கு. ராஜ யோகம் - அதுவும் சிவராஜ யோகம்!

அப்படிக் கால் மேல் கால் போட்டுக் கொண்டு அந்த நிலையில் இருந்தபடியே ரசித்துக் கேட்டாளாம். முத்துஸ்வாமி தீக்ஷிதர் பாடியபோது, அவள் சன்னிதி எதிர்த்தாற்போலே இருக்கிற மண்டபத்தில் அமர்ந்துதான் அவர் பாடினார் என்று ஓர் ஐதீகம் உண்டு.

அந்த முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு இரண்டு மனைவியர் உண்டு. அவர்களுள் இரண்டாவது மனைவிக்கு ஒரு சின்ன ஆசை வந்தது. சராசரியாகப் பெண்களுக்கு வரக்கூடிய ஆசைதான். என்ன ஆசை என்றால், ஆபரணங்களையெல்லாம் அணிந்து கொண்டு சர்வாலங்கார பூஷிதையாக இருக்க வேண்டும் என்கிற ஆசை! அந்த அம்மாள் முத்துஸ்வாமி தீக்ஷிதரிடம் வந்து கேட்டார்கள் : ''நீங்கள்தான் அம்பாளைப் பாடினால், அவள் எதை வேண்டுமானாலும் கொடுப்பாளே...'' என்று கேட்டிருக்கிறார்.

கேட்ட விதமும் எப்படி இருந்திருக்கிறது பாருங்கள் - 'எப்படியேனும் எனக்கு நகைகளைச் சம்பாதித்துக் கொடுங்கள்' என்று கேட்கவில்லை. நியாயமான, நாகரிகமான வழியில்தான் கேட்டிருக்கிறார் - 'அம்பாளிடம் கேட்டால் அவள் கொடுப்பாள். எனக்கு அவளிடம் கேட்டு வாங்கிக்

கொடுங்கள்' என்றுதான் கேட்டிருக்கிறார்.

தீக்ஷிதருக்கு மனம் கொஞ்சம் வருத்த மாக இருந்ததாம். இந்தப் பெண் இப்படிக் கேட்கிறாளே, 'நகை வேண்டும்' என்கி றாளே! அம்பாளிடம் போய் ஆபரணம் வேண்டும் என்றா கேட்பது! அம்பாளிடம் முக்தியைக் கேட்பதை விட்டுவிட்டு, சாயுஜ்யத்தைக் கேட்பதை விட்டுவிட்டு, நகையைக் கேட்பதாவது! அட்டிகையைக் கொடு, தோடு கொடு, வளையல் கொடு என்று கேட்பதா! எப்படிக் கேட்பது என்று தயக்கமாக இருந்ததால் அவர் கேட்கவே யில்லை!

## கேட்காத வரம்!

இரண்டு மூன்று நாட்கள் ஆயின. காலையில் அந்தப் பெண் வேகவேகமாக வந்து இவரைத் தட்டி எழுப்பினாள். ''நீங்கள் அம்பாளிடம் ஒன்றும் கேட்க வேண்டாம்'' என்றாள்!

அப்படி அவள் 'ஒன்றும் கேட்க வேண்டாம்' என்று சொல்கிறபோதே, தீக்ஷிதர் மனத்தில் ஒரு நெருடல் - 'இத் தனை நாட்களாக நாம் எதுவுமே கேட்க வில்லை என்பது தெரிந்துதான் இப்படிச் சொல்லுகிறாளே?' என்று ஒரு நெருடல். ''என்ன நடந்தது?'' என்று கேட்டார்.

''ஒன்றுமில்லை. அம்பாள் எல்லாம் கொடுத்துவிட்டாள்'' என்றாள் அப்பெண்.

இவருக்கு மனசுக்குள் மீண் டும் நெருடல் - 'ஒரு வேளை இந்தப் பெண் தானே அம் பாளிடம் கேட்டு அவள் கொடுத்து விட்டாளோ! ஏதேனும் பெட்டியில் போட்டு வைத்திருக்கிறாளோ? அப்ப டிக் கிடைத்திருக்கிறதென்றால், இது ரொம்ப சராசரியான ஆசை ஆயிற்றே! இந்த மாதிரி நடந்திருந்தால் என்ன செய்வது?' என்கிற வருத்தத்தோடு ''என்ன ஆயிற்று?'' என்று கேட்டார்.

அந்தப் பெண் அப்போது சொன்னாள்:

''இல்லை, ராத்திரி அம்பாள் என் கன வில் வந்தாள். சர்வாலங்கார பூஷிதையாக வந்தாள் - கண்ணாற நான் தரிசித்தபோது, ''போதுமா? உனக்கு இன்னும் நகைகள் வேண்டுமா?'' என்று கேட்டாள்! எனக்கு இனிமேல் நகைகள் வேண்டாம். அம் பாளை, அந்த மாதிரி ஆபரணங்களுடன் தரிசித்த பிறகு எனக்கு நகை ஆசையே இல்லை'' என்றாள்.

ஆகவே, அம்பாள் நமது கோரிக்கை களை, ஆசைகளை, எப்படித் தீர்த்து வைக்கிறாள் என்பதுதான் முக்கியம். ஒரு வேளை ஒரு அட்டிகையைக் கேட்டு, அவள் கொடுத்திருந்தாள் என்று வைத்துக் கொள்வோமே, - ஒரு வைர அட்டிகை யைக் கொடுத்திருந்தால் என்ன நடக்கும்? அடுத்த நாளே, நேற்றைக்குக் கேட்டது கிடைத்தது; இன்றைக்கு இன்னொன்று கேட்போமே என்று தோன்றும் அல்லவா?

ஆனால், மனசுக்குள்ளே, 'இனிமேல் வேண்டாம்; அம்பாளை அப்படி சர்வாலங் கார பூஷிதையாகத் தரிசனம் பண்ணிய பிறகு, அந்த ஆபரணங்கள் நான் அணிந்து கொள்வதற்கானவை அல்ல; எனக்கு அந்த ஆசை போய்விட்டது' என்கிற எண் ணத்தை அம்பாளே ஏற்படுத்துகிறாள் என்றால்...? நமது மனசுக்குள்ளே இருக்கிற ஆசைகளை பாக்கியமாக மாற்றி, தீர்த்து வைக்கக் கூடியவள், சகல சௌபாக்கிய தாயினி, சகல சௌபாக்கியங்களையும் தர வல்லவள் அம்பாள்தான்.

**'அம்மா! நான் ஏதோ லட்ச ரூபாய் கேட்டேன் ;நீ கொடுத்ததுதான் கொடுத்தாய், கோடியாகக் கொடுத்திருக்கக்கூடாதா?'**

பணம் வேண்டும் என்று கேட்பது

நமது ஆசையினால். ஒரு லட்சம் ரூபாய்க் கட்டினை இங்கே கொண்டு வந்து வைத்தால் என்ன தோன்றும்? 'அம்மா! நான் ஏதோ லட்ச ரூபாய் கேட்டேன். நீ கொடுத்ததுதான் கொடுத்தாய், கோடி யாகக் கொடுத் திருக்கக்கூடாதா? இன்றைக்கு லட்சம் என்பது என்ன பெரிய தொகையா? அட, ஒரு கோடி வேண் டாம்; ஐம்பது லட்சமாகத் தந்திருக்கக் கூடாதா? ஏதோ நான்தான் கஞ்சத்தனமாகக் கேட்டுவிட் டேன். நீயாவது புரிந்துகொண்டிருக்கலாம்' என்று மனம் போய்க்கொண்டே இருக்கும். அதற்கு ஓர் எல்லையே கிடையாது.


* கமலாம்பிகை

ஆனால், அதே மனத்தினுள்ளே வேண் டாம் என்கிற எண்ணத்தை மட்டும் ஏற் படுத்திவிட்டால்...? அம்பாளைத் தரிசிக்க வேண்டும்; அது தவிர வேறு எதுவும் எனக்கு வேண்டாம் என்று ஓர் எண்ணத்தை ஏற்படுத்தக்கூடிய தன்மை இருக்கிறதே... அந்தத் தன்மையைத் தரக்கூடியவள் **அவள்** தான். அந்தத் தன்மைதான் உண்மையான பக்தி! அதனால்தான் **சகல செளபாக்கிய தாயினி** என்கிற திருநாமம் அவளுக்கு.

## சாம்பவி

**ச**கல செளபாக்ய தாயினியாக இருக்கக் கூடியவள்,

**பக்திப்ரியாவாக** இருக்கக் கூடியவள்

**பக்தி கம்யாவாக** இருக்கக் கூடியவள்

**பக்திவச்யாவாக** இருக்கக் கூடியவள் அம்பாள்.

**பக்தி வச்யா** என்றால், பக்திக்கு வசப் படக்கூடியவள். பக்திக்கு, பிரியத்தோடு என்ன தரவேண்டுமோ அதைத் தர வல்லவள்.

**சாம்பவியாக** இருக்கக் கூடியவள் அம்பாள். சாம்பவி என்றால், மகிமையும் இனிமையும் இளமை யும் தரக் கூடியவள்.

**சாரதா ஆராத் யாவாக** இருக்கக் கூடியவள். சாரதா என்கிற சரஸ்வதி யினால் ஆராதிக்கப் படக்கூடியவள்.

- இப்படி அவளு டைய குண விசே ஷங்களையும், தனிச் சிறப்பு களையும் அவள் இந்த சிருஷ்டி யிலுள்ள ஜீவன்களிடத்திலே எவ்வாறு பிரயோகம் செய்கிறாள் என்பதைச் சொல் லக் கூடிய திருநாமங்கள், அடுத்து வரக் கூடிய திருநாமங்கள்.

## நேர் எதிர் நாமங்கள்!

**நீராகா** என்றொரு திருநாமம் - வித்தி யாசங்கள், வேறுபாடுகள் இல்லாமல் இருக் கக் கூடியவள் என்று இதற்கு அர்த்தம்.

அதே சமயத்தில், **ராகமதனி** என்றும் ஒரு திருநாமம். - வித்தியாசங்கள் இருந் தால் அவற்றைப் போக்கக்கூடியவள் என்று இதற்குப் பொருள்!

அதே மாதிரி, **நிர்மதா** - அவள் மத மில்லாமல் இருக்கிறாள்.

**மதநாசினி** - மதம் என்கிற அஹங்காரம் ஏற்படுகிறபோது அதனை நாசம் செய்யக் கூடியவள் அவளே! இந்தத் திருநாமங்கள் எப்படி என்றால், ஒன்றுக்கு ஒன்று நேர் மாறானவை. ஆனால், இரண்டும் எங்கே கொண்டு போய் நிறுத்தும் என்றால், இரண்டும் ஒரே இடத்தில் கொண்டு போய் நிறுத்தும். எப்படி இது சாத்தியம் என்ப தற்கு ஒரு சுவாரஸ்யமான உதாரணம் சொல்லலாம்.

***(வளரும்)***

# காற்று

மா. கண்ணன்



துடைத்துத் துடைத்து
அழகழகாய் அடுக்கிய
பொம்மைகளின் மீது
மீண்டும்
தூசியால் மெழுகிறது
காற்று

பிறவற்றிலும் தொடர்கிறது
காற்றுக்கும்
எனக்குமான போட்டி

வீசிப்போகும்
குளிர் ஊசிகளைத்
தடுக்க
மூடிய ஜன்னல்களை
மீண்டும் வந்து தட்டுகிறது
திறக்கச் சொல்லி

திறந்திருக்கும் புத்தகங்களை
பாமரன் போல்
படிக்காமலேயே புரட்டுகிறது

இறுதியாய்
காற்றை வெல்ல
என்ன வழியென யோசிக்கையில்
தோல்வியுற்றது போல்
என்னிலிருந்தே வெளியேறுகிறது

நெஞ்சடைக்க
நெடுஞ்சாண் கிடையாய்
விழுந்து
சரணடைந்தேன் நான்



முன்னோர்களுக்கு திதி செய்ய மறந்தவர்களுக்கும், திதி, தர்ப்பணம் செய்யத் தவறியவர்களுக்கும் பித்ரு பூஜை நிறைவேற்ற ஏற்ற காலம் மஹாளயபக்ஷ அமாவாசையே. பித்ரு தர்ப்பண க்ஷேத்ரமான

# காசியில் மஹாளய அமாவாசை அன்று

## (10-10-2007) நடைபெறும் பித்ரு பூஜையிலும் அன்னதானத்திலும் அனைவரும் கலந்து கொண்டு பித்ருக்களின் ஆசிர்வாதத்தை பெற அன்புடன் அழைக்கிறோம்

**ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட் 9 ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து நடத்தும் முன்னோர் வழிபாடு**

**பேரன்புடையீர்! வணக்கம். தங்களுக்கு முன்னோர்களின் பரிபூரண ஆசியும், ஆதரவும் கிடைக்க பிரார்த்திக்கிறோம்.** பித்ரு க்ஷேத்ரமாக விளங்கும் காசியில் அன்பர்கள் அனைவராலும் **கங்கைக்கு ஜல தீபம் ஏற்றி** மஹாளய அமாவாசை அன்று முன்னோர் வழிபாடு செய்து, அவர்கள் நினைவாக அன்னதானம் செய்ய முடியும் என்ற இறை சிந்தனையோடு அனைத்து வாசக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க **ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட் மூலம் மஹாளய அமாவாசையில் காசியில் பித்ருக்கள் நினைவாக கங்கைக்கு ஜலதீபம் ஏற்றி அவர்கள் நினைவாக வஸ்தரதானத்துடன் அன்னதானமும் வைதீக முறைப்படி செய்யப்படுகிறது.** மஹாளய அமாவாசை அன்று தர்ப்பணமும், அன்னதானமும் செய்தால் பித்ருக்கள் பூரண திருப்தி ஏற்பட்டு தங்களுக்கும், தங்களுடைய சந்ததிகளுக்கும் அனைத்து வகை ஆரோக்யத்தையும் அளிக்கிறார்கள். மஹாளய அமாவாசை அன்று நடைபெறும் **அன்னதான திருப்பணி** மற்றும் **முன்னோர் வழிபாட்டுக்கு** தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பி **ஸ்ரீ மகா விஷ்ணுவின்** நல்லாசியும் மற்றும் **பித்ருக்களின் ஆசிர்வாதமும்** பெற அன்புடன் அழைக்கிறோம்.

பித்ருக்கள் நினைவாக நடைபெறும் அன்னதானத்திற்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு திருக்கயிலாயத்தில் இருந்து நேரடியாக பெறப்பட்ட கீழ்கண்ட ருத்ராட்சங்கள் அனுப்பி வைக்கப்படும்

- **ரூ. 300** - அனுப்பும் அன்பர்களுக்கு, 5 முகம் கொண்ட ருத்ராட்சம் 5 அனுப்பி வைக்கப்படும்.
  (5 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு அனைத்து தோஷங்களும் நிவர்த்தியாகும். ரத்த அழுத்தம், இதய கோளாறுகளை சீர் செய்யும்).
- **ரூ. 500** - அனுப்பும் அன்பர்களுக்கு, ருத்ராட்ச மாலை அனுப்பி வைக்கப்படும்.
  (ருத்ராட்ச மாலை அணிபவர்கள் அனைத்து சிவ ஸ்தலங்களையும் தரிசித்த மஹாபுண்ணிய பலனை பெறலாம்).
- **ரூ. 1000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 3 முகம் (மஹா சரஸ்வதி) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (3 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு அறிவு வளர்ச்சி, கல்வி மேம்பாட்டிற்கும் உதவும். குழந்தைகளுக்கும் மாணவர்களுக்கும் பொருத்தமானது).
- **ரூ. 2000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 7 முகம் (சப்த ரிஷி) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (7 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு தடைபட்ட திருமணம் நடக்கும். மேலும் செவ்வாய்தோஷம் விலகி சுப நிகழ்ச்சிகள் கைகூடும்).
- **ரூ. 3000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 11 முகம் (வீர ஹனுமான்) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (11 முக ருத்ராட்சத்தை அணிவதால் குழந்தை இல்லாதவர்களுக்கு புத்திர பாக்கியம் உண்டாகும்).
- **ரூ. 5000** - அனுப்பும் அன்பர்களுக்கு, கௌரி சங்கர் (சிவ-பார்வதி) ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (கௌரி சங்கர் ருத்ராட்சத்தை அணிபவர்கள் கணவன் - மனைவி ஒற்றுமையுடன் வாழ்வார்கள். நீண்ட ஆயுளையும் தரும்).
- **ரூ. 6000** - அனுப்பும் அன்பர்களுக்கு, ஒரு முகம் (ஸ்ரீபரமேஸ்வரன்) ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (ஒரு முக ருத்ராட்சத்தை அணிந்தவர்களை எதிரிகளால் கூட வெல்ல முடியாது மற்றும் பிரம்மஹத்தி தோஷமும் நீங்கும்).
- **ரூ. 7000** - அனுப்பும் அன்பர்களுக்கு, ஸ்ரீகணேஷ் (விநாயக பெருமானின் முழுத்தோற்றம்) ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (ஸ்ரீகணேஷ் ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு செழிப்பான வளர்ச்சியுடன் எடுத்த காரியத்தில் வெற்றியும், அஷ்ட லக்ஷ்மிகளின் அருளும் கிடைக்கும்).
- **ரூ. 10000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 21 முகம் (குபேர ஸ்வரூபம்) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (சகல ஆன்மீக சக்திகளையும், ஆத்ம பலத்தையும், ஆரோக்கியத்தையும் வழங்கி, சகல செல்வங்களும் சொத்துக்களும், சுகங்களும் கிடைக்கும்).

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம், தர்ப்பணம் செய்ய **காசி, கயா,** பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் சேர்த்து ரூபாய் 1000 அனுப்பும்போது யாருக்கு சிரார்த்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் **பெயர், திதி** மற்றும் **கோத்ரம்** போன்ற விபரங்களை தெரிவித்தால், தங்கள் விருப்பப்படி மஹாளய அமாவாசை அன்று முன்னோர் வழிபாடு முறையாகவும், முழுமையாகவும் செய்யப்பட்டு, **அவர்களின் நினைவாக வஸ்திரதானத்துடன் அன்னதானம்** செய்யப்படும். பித்ரு காரியங்களுக்கு பணம் அனுப்பும் அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான **'அக்ஷய வடத்தின்'** படமும், கயாவில் உள்ள **விஷ்ணு பாதமும், விஷ்ணு பாதத்தின் படமும்** மற்றும் ஸ்ரீஅன்னபூரணி அன்னையின் விக்ரகமும் கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பு, காசி கயிறு அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் சிரார்த்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு **க்ஷேத்ரத்தில்** பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு **பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.**

மஹாளய அமாவாசை அன்று முன்னோர்கள் நினைவாக நடைபெறும் அன்னதான சேவையிலும், முன்னோர் வழிபாட்டிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை **Cheque/D.D/M.O.** மூலம் **Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai** என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி பித்ருக்களின் ஆசியை பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு**

# ஸ்ரீஅன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd).**
**4, Appavoo Gramani IIIrd Street R.A.Puram, Chennai - 28**
**TEL : 044 - 2495 9302 Fax : 044 - 4206 6525.**

**பித்ருக்களுக்கு மஹாளய அமாவாசையில் தர்ப்பண பூஜை செய்வது இந்துக்களின் இன்றியமையாத கடமையாகும்**

# ஜெ ஜென்… கூட்ட…



''மன்னர் ஏன் கவலையாக உள்ளார்?''

''அவர் நகர்வலம் சென்றபோது மக்கள் 'ஒன்ஸ் போர்... ஒன்ஸ் போர்' என கோஷமிட்டார்களாம்!''

-வி.விஷ்ணுகுமார்




'' 'தகவல் அறியும் சட்டத்தை' அமுல்படுத்தியது தவறாகப் போய் விட்டது அமைச்சரே?''

''ஏன் மன்னா?''

''அந்தப்புரத்தில் எத்தனை பெண்கள் இருக்கிறார்கள்? என்று கேள்வி கேட்டு ஒருத்தன் மனு கொடுத்திருக்கிறான்!''

- ஆலன் டேவிட் ராய்



''நாலு நாளா என் மகளையும் காணோம். உங்க மகனையும் காணலை. இதுக்கு என்ன அர்த்தம்?''

''கோபப்படாதீங்க சம்பந்தி!''

- எம்.ஏ.கண்ணன்

''தண்ணீரின்
பயன்பாடு பற்றிக்
கட்டுரை எழுதியதில்
உனக்கு இரண்டாம் பரிசு
கிடைத்திருக்கிறதே. முதல்
பரிசு யாருக்கு?''
''பால்காரர் மகனுக்கு
அப்பா!''
- அ.ப.ஜெயபால்



''தலைவர் வீடு, ஜேஜேன்னு ஒரே
கூட்டமா இருக்குதே!''
''ஆமாம், அவரோட 'பினாமிங்க' கூட்
டத்துக்கு ஏற்பாடு பண்ணியிருக்கார்!''
- யமுனா ரேணுகாநாதன்



''ஒரே நாள்ல ஆறு
வீட்டுல
திருடியிருக்கிறியே...?''
''ரொம்பப் புகழாதீங்க
எஜமான், எனக்குக்
கூச்சமாயிருக்கு.''
- மா.கண்ணன்





கனவின் நுழைவாயில்

## இதுவரை...

பார்த்திப சோழன் ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் உறையூரில் ஆட்சி செலுத்திய சிற்றரசன். அந்நாளில் தென்னாட்டில் பிரசித்த சக்கரவர்த்தியாயிருந்த காஞ்சி நரசிம்ம பல்லவனுக்கு அவன் கப்பம் செலுத்த மறுத்துப் போருக்கு ஆயத்தமாகிறான். யுத்தத்துக்குப் புறப்படுவதற்கு முன்னால் பார்த்திபன் தன் மகன் விக்கிரமனைச் சித்திர மண்டபத்துக்கு அழைத்துப் போகிறான். அங்கே வெகுநாளாய்ப் பூட்டிக் கிடந்த கதவைத் திறந்து கொண்டு உள்ளே செல்கிறான். சோழ ராஜ்யத்தின் வருங்கால மகோன்னதத்தைப் பற்றி பார்த்திபன் கண்டுவந்த பகற் கனவுகள் அந்த இரகசிய மண்டபத்தின் சுவர்களில் அவன் கையினால் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை பார்த்திபன் இளவரசனுக்குக் காட்டி, அந்தக் கனவுகளை உண்மையாக்கப் பாடுபடுவதாய் அவனிடம் பிரதிக்ஞை வாங்கிக் கொள்கிறான். அருகில் தீவட்டி ஏந்தி நின்ற படகோட்டி பொன்னனை இளவரசனுக்குத் துணையாயிருக்கும்படி ஆக்ஞாபிக்கிறான்.

ராணி அருள்மொழிதேவியிடமும் இளவரசனிடமும் விடைபெற்றுக் கொண்டு பார்த்திபன் போருக்குக் கிளம்புகிறான். பார்த்திபனின் மாற்றாந் தாய் மகனும், சோழர் படையின் பழைய சேனாதிபதியுமான மாரப்பபூபதி போருக்குக் கிளம்பும் சமயத்தில் மூர்ச்சையாகி விழுந்து விட்டான் என்று செய்தி வருகிறது. பார்த்திபன் புன்னகை கொள்கிறான்.

புரட்டாசி பௌர்ணமியன்று வெண்ணாற்றங்கரையில் சோழர் படையும், பல்லவ சைன்யமும் சந்திக்கின்றன. மகத்தான பல்லவ சைன்யத்தின் முன் சோழரின் சிறுபடை அதிவிரைவில் சின்னாபின்னமாகிறது. ஆனால், சோழர் படையில் ஒருவன்கூடத் திரும்பிச் செல்லவில்லை. அவ்வளவு பேரும் வீரப் போர் புரிந்து யுத்த களத்திலேயே மடிகிறார்கள்.

போர் நடந்த அன்று இரவு யுத்த களத்தில் சிவனடியார் ஒருவர் எதையோ தேடி அலைந்து கொண்டிருக்கிறார். சோழர்களின் பட்டத்து யானை பார்த்திபனுடைய உடலைக் கண்டுபிடித்து அதன் அருகில் விழுந்து உயிர் விடுகிறது. சிவனடியார் அங்கே சென்று பார்த்திபனுடைய உடலை மடியில் போட்டுக் கொண்டு முகத்தில் தண்ணீர் தெளிக்கிறார். பார்த்திபனுக்கு உணர்வு வருகிறது. தன்னுடைய புதல்வன் விக்கிரமனை வீர புருஷனாக வளர்க்க வேண்டுமென்று சிவனடியாரிடம் பார்த்திபன் வரம் வாங்கிக் கொள்கிறான். சிவனடியார் தமது ஜடாமுடியை நீக்கியதும், பார்த்திபன், "ஆஹா! தாங்களா?" என்று அளவிலாத வியப்புடன் கூறிவிட்டு உயிரைவிடுகிறான்.

இதன் பிறகு ஆறு ஆண்டுகள் செல்கின்றன.

ஓர் அதிகாலை நேரத்தில், காவேரி நதிக்கரையோரச் சாலையில் ஆஜானுபாகுவான ஒரு வீரன் குதிரையில் செல்கிறான். ஓர் இடம் வந்ததும் அந்த வீரன் சிவனடியாராக வேஷம் தரித்துக்கொண்டு, பொன்னனின் குடிசைக்குச் செல்கிறான். சிவனடியார், மகாராணி அருள்மொழிதேவியையும் இளவரசனையும் அழைத்து வரச் சொல்கிறார். வரும் புரட்டாசிப் பௌர்ணமி

அமரர் கல்கி

# பார்த்திபன்

யன்று சிராப்பள்ளி மலைமீது பறக்கும் பல்லவர் கொடியை எடுத்தெறிந்துவிட்டு சோழர் கொடியான புலிக் கொடியைப் பறக்க விடப் போவதாகவும், அதற்குத் தனது சித்தப்பா மாரப்பபூபதி உதவிசெய்யப் போவதாகவும் இளவரசன் விக்கிரமன் சிவனடியாரிடம் கூறுகிறான். அதற்கு ஆசி வழங்கிய சிவனடியார், புறப்படச் சித்தமா கிறார். அப்போது மகாராணி, இளவரசன் உயிரைக் காக்கும் பொறுப்பைச் சிவனடி யார்தான் ஏற்க வேண்டும் என்று அவரிடம் வாக்குறுதி வாங்கிக்கொள்கிறாள்.

மாமல்லபுரத்துக்கு நரசிம்ம சக்ரவர்த்தி யும் அவர் மகள் குந்தவிதேவியும் விஜயம் செய்கிறார்கள். மாமல்லபுரத்துக்கு அப்பெயர் ஏற்பட்ட காரணத்தைக் குந்தவிக்கு விளக்கிக்கொண்டிருந்த சமயத்தில் ஒரு தூதன் வந்து, சோழ இளவரன் விக்கிரமன் தனது சோழநாட்டின் சுதந்திரக் கொடியைப் பறக்கவிடும் தகவலடங்கிய ஓலையைக் கொடுக்கிறான். "அப்பா, அந்த இராஜ குமாரனுக்கு எத்தனை அகந்தை! அவனுக் குத் தகுந்த தண்டனை கொடுக்க வேண்டும்!" என்கிறாள் குந்தவி.

"ஆமாம், அவனை காஞ்சிக்கு அழைத்து வரச்செய்து நானே தகுந்த தண்டனை விதிக்கப் போகிறேன்!" என்கிறார் சக்கர வர்த்தி.

## 6. கலைத் திருநாள்

மாமல்லபுரத்தில் சக்கரவர்த்தி மூன்று தினங்கள் தங்கியிருந்தார். அந்த மூன்று நாட்களும் அந்நகரம் ஆனந்த கோலா கலத்தில் மூழ்கிக்கிடந்தது.

முதல் நாள் பட்டணப் பிரவேச ஊர்வ லம் வந்தது. சக்கரவர்த்தியையும் அவரு டைய திருமகளையும் மாமல்லபுரவாசிக ளவரவர்களுடைய வீட்டு வாசலில் தரிசித்து உபசரித்து மகிழ்ந்தார்கள்.

மறுநாள் சரஸ்வதி பூஜையன்று காலை யில் நகரவாசிகள் தத்தம் வீடுகளில் வாணி பூஜை நடத்தினார்கள். பிற்பகலிலும் சாயங் காலத்திலும் பொது இடங்களில் கலை மகளின் திருநாளைக் கொண்டாடினார்கள். கோயில்கள், மடாலயங்கள், கலா மண்ட பங்கள், வித்யாசாலைகள் எல்லாம் அமோ கமான அலங்காரங்களுடன் விளங்கின.

அன்று சக்கரவர்த்தியும் குந்தவிதேவி யும் சிவன் கோயில்களுக்கும் விஷ்ணு ஆல யங்களுக்கும் சென்று சுவாமி தரிசனம் செய்து, அர்ச்சகர்களுக்குச் சன்மானம் அளித் தார்கள். கலைக் கூடங்களுக்கும், வித்யா சாலைகளுக்கும் விஜயம் செய்து, ஆசாரி யர்களுக்குப் பொன்னும் புது வஸ்திரங் களும் பரிசளித்தார்கள். அவர்கள் நகரில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் போகும்போதெல்லாம் வீதியில் ஜனங்கள் கும்பல்கும்பலாக நின்று பலவித வாழ்த் தொலிகளினால் தங்களுடைய குதூகலத் தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.



# கனவு



ஆனால், மாமல்லபுரவாசிகளுடைய குதூகலத்தின் முழு அளவையும் மறுநாள் விஜய தசமியன்றுதான் பார்க்கக் கூடியதாயிருந்தது. அன்று திருவிழா, நகருக்கு வெளியே நடந்தது.

மாமல்லபுரத்துக்குத் தெற்கே நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் பரவி நின்ற சிறு குன்றுகளும் பாறைகளும் அன்று அற்புதமான தோற்றங்கொண்டு விளங்கின. பாறைகளின் சுவர்களிலெல்லாம் விதவிதமான வர்ண வேறுபாடுகளுடன் புராணக் கதைகள் சித்திரிக்கப்பட்டிருந்தன. ஒரு விசாலமான பாறையிலே, நந்த கோகுலத்தில் பாலகோபாலன் செய்த லீலைகள், பூதனை சம்ஹாரத்திலிருந்து காளிங்க நர்த்தனம் வரையில் வெகு அழகாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன. தயிர் கடைந்து கொண்டிருந்த யசோதையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு வெண்ணெய் வேண்டுமென்று கண்ணன் கெஞ்சிக் கொண்டிருந்த சித்திரத்தைப் பார்த்த வண்ணமே வாழ்நாளைக் கழித்து விடலாமென்று தோன்றியது.

இரு பிளவாகப் பிளந்திருந்த இன்னொரு பாறையில் ஆகாச கங்கையைப் பூமிக்குக் கொண்டு வருவதற்காக பகீரதன் கடுந்தவம் செய்த காட்சி சித்திரிக்கப்பட்டிருந்தது. அவனுடைய தவ மகிமையினால் கவரப்பட்டு தேவர்கள், முனிவர்கள் எல்லோரும் வந்து இருபுறமும் நிற்கிறார்கள். அவர்களுடைய முகங்களில் வியப்பும் பக்தியும் காணப்படுகின்றன. இந்த ஒப்பற்ற சித்திரக் காட்சியை எழுதிய ஓவியக்காரன் நகைச்சுவை நிரம்ப உள்ளவனாகவும் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் ஒரு மூலையில் கண்ணை மூடிக் கொண்டு தவஞ்செய்வதாகப் பாசாங்கு செய்த ஒரு பூனையின் உருவத்தையும் அவன் எழுதியிருந்தான்.

இந்த மாதிரி எத்தனையோ அற்புதச் சித்திரக் காட்சிகள் ஒவ்வொரு பாறை முகப்பிலும் காணப்பட்டன. இந்தக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டு ஸ்திரீகளும் புருஷர்களும் சிறுவர் சிறுமிகளும் கும்பல் கும்பலாக அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லாரும் பட்டுப் பட்டாடைகள் அணிந்து, திவ்ய ஆபரணங்களைப் பூண்டிருந்தார்கள். ஸ்திரீகள் கூந்தலில் மலர் சூடியிருந்தார்கள். புருஷர்கள் கழுத்தில் பூமாலைகளை அணிந்திருந்தார்கள். எங்கே பார்த்தாலும் ஒரே கோலாகலமாகவும் குதூகலமாகவும் இருந்தது.

ஜனங்களின் குதூகலத்தை அதிகப்படுத்துவதற்குச் சித்திரக் காட்சிகளைத் தவிர இன்னும் பல சாதனங்களும் அங்கேயிருந்தன.

ஆங்காங்கு வாழை மரங்களாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட சிறுசிறு பந்தல்கள் காணப்பட்டன. அந்தப் பந்தல்களில் இசை விருந்துகள் நடந்து கொண்டிருந்தன. ஒரு பந்தலிலிருந்து குழலோசை வந்துகொண்டிருந்தது. வேறொரு பந்தலில் வேதியர்கள் ஸாமகானம் செய்து கொண்டிருந்தார்கள். மற்றொரு பந்தலில் ஓர் இசைப் புலவர், அப்பர் பெருமானின் தேவாரப் பதிகங்களைக் கல்லுங்கனியப் பாடிக் கொண்டிருந்தார். ஜனங்கள் அவரவர்களுக்கு இஷ்டமான இடத்திலே போய் நின்று சித்திரக் காட்சி



களையும், இசை விருந்துகளையும் அனு பவித்துக் கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே அமைக்கப்பட்டிருந்த தண்ணீர்ப் பந்தல் களிலும் கூட்டத்துக்குக் குறைவில்லை. அவல் பொறியும் சர்க்கரையும் பானகமும் நீர்மோரும் வந்தவர்களுக்கெல்லாம் உப சரிப்புடன் வழங்கப்பட்டன.

இவ்விதம் கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே ஜனசமுத்திரமாய்த் தோன்றிய தாயினும் அந்த ஜனத்திரளுக்கு மத்தியில் ஓரிடத்தில் மிகவும் நெருங்கிய ஜனக்கூட் டம் காணப்பட்டது. இக் கூட்டம் ஒரே இடத்தில் நிலைத்து நில்லாமல் போய்க் கொண்டிருந்தது. அந்தக் காட்சியானது, சிறு சிறு அலைகள் எழுந்து விழுந்து கொண்டி ருக்கும் சமுத்திரத்தில், ஒரே ஒரு பெரிய அலை மட்டும் தொடர்ச்சியாகப் போய்க் கொண்டிருப்பது போல் தோன்றியது. இந்தப் பெரிய அலைக்குக் காரணமா யிருந்தவர்கள், சக்கரவர்த்தியும் அவரு டைய செல்லப் புதல்வியுந்தான். நரசிம் மவர்மர் உயர்ந்த ஜாதிப் புரவி ஒன்றின் மேல் வீற்றிருந்தார். குந்தவி தேவியோ பல்லக்கில் இருந்தாள். இவர்களுக்கு முன்னாலும் பின்னாலும் கூட்டத்தை விலக்கி வழி செய்வதற்காக ஒரு சில வீரர்கள் மட்டுமே சென்றார்கள். அவர் களுக்குச் சற்று முன்னால், சக்கரவர்த்தியின் வருகையை அறிவிப்பதற்காக, ஒரு பெரிய ரிஷபத்தின் மேல் முரசு வைத்து அடித்துக் கொண்டு போனார்கள்.

ஜனத்திரளுக்கு இடையே சென்று கொண்டிருந்த இந்த ஊர் வலம் ஆங்காங்கு நின்று நின்று போக வேண்டிய தாயிருந்தது. சித்திரக் காட்சியைப் பார்ப்பதற் காகச் சக்கரவர்த்தி நின்ற இடங்களில் எல்லாம் அவர் மேலும் குந்தவி தேவியின் மேலும் பூமாரி பொழிந்தார்கள். நறுமணம் பொருந்திய பனிநீரை இரைத்தார்கள். சந்தனக் குழம்பை அள்ளித் தெளித்தார்கள். ''ஜய விஜயீ பவ!'' என்றும், ''தர்ம ராஜாதி ராஜர் வாழ்க!'' ''திருபுவன சக்கரவர்த்தி வாழ்க!'' ''நரசிம்ம பல்லவேந்திரர் வாழ்க!'' ''மாமல்ல மன்னர் வாழ்க'' என்றும் கோஷித்தார்கள்.

சக்கரவர்த்தி ஒவ்வொரு சித்திரக் காட்சி யையும் விசேஷ சிரத்தையுடன் பார்வை யிட்டு, ஆங்காங்கு பயபக்தியுடன் நின்று கொண்டிருந்த ஓவியக்காரர்களிடமும், சிற்பக் கலைஞர்களிடமும் தமது பாராட்டு தலைத் தெரிவித்துக்கொண்டு வந்தார்.

இவ்விதம் சுற்றிப் பார்த்துக் கொண்டு கடைசியாக ஊர்வலம் துர்க்கை ஆலயத் தண்டை வந்து சேர்ந்தது. இந்தத் துர்க்கை ஆலயம் மகேந்திரவர்மனின் காலத்திலே குன்றில் குடைந்து நிர்மாணித்தது. திருப் பணி வேலை இடையில் தடைபட்டுப் பூர்த்தியாகாமல் இருந்தது. அன்று நடந்த கோலாகலமான விழாக் கொண்டாட் டத்தில் இந்தத் துர்க்கை ஆலயந்தான் நடு நாயகமாயிருந்தது. அந்தப் பாறைக் கோயிலுக்கு எதிரே மிகவும் விஸ்தாரமான பந்தல் போடப்பட்டிருந்தது. அந்தப் பந் தலுக்கு உள்ளேயிருந்து அண்ணாந்து பார்த் தால் அமாவாசையன்று நள்ளிரவில் துல்லியமான ஆகாயத்தைப் பார்க் கிறோமோ என்ற பிரமை உண்டாகும். அவ்விதம் பிரகாசமான நட்சத்திரங்களைப் போல ஜொலித்த எண் கோணப் பொட்டுக்கள் அமைந்த நீலப் பட்டாடை யினால் மேல்விதானத்தைக் கட்டியிருந்தார்கள். பந் தலின் தூண்களில் விதவித மான வர்ணப் பட்டாடை களைச் சுற்றியிருந்தார்கள். பந்தலுக்கு மேலே வரிசை யாகச் சிங்கக் கொடிகள் மாலைக் கடற்காற்றில் அசைந்து ஆடிக் கொண்டி ருந்தன. பந்தலின் விளிம்பு களில் இளந்தென்னங் குருத்துகளினாலான தோர

**உயர்ந்த பட்டு வஸ்திரங்களும் நூறு பொன் 'களஞ்சு'களும் வைத்திருந்த தாம்பூலத் தட்டை ஆசாரிய தபதி வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டார்!**



ணங்கள் தொங்கி ஆடிக் கொண்டிருந்தன.

பந்தலின் மத்தியில், தேவியின் சன்னதிக்கு எதிரே சக்கர வர்த்திக்கும் அவருடைய புதல்விக்கும் இரண்டு அழகிய சிம்மாசனங்களும், அவற்றைச் சுற்றிலும் வரிசை வரிசையாக இன்னும் பல ஆசனங்களும் அமைக்கப்பட்டிருந்தன. புலி கேசியின் படையெடுப்பினால் தடைப்பட்டுப் போன சிற்பத் திருப்பணியை இந்தத் துர்க்காதேவியின் கோயிலில் விஜயதசமி தினத்தில் மீண்டும் தொடங்குவதாக ஏற்பாடாகி இருந்தது. சக்கரவர்த்தி வருவதற்கு நெடுநேரத்துக்கு முன்னமேயே பந்தலில் மந்திரி மண்டலத்தாரும், மற்ற அதிகாரிகளும் வந்து அவர்களுக்குரிய ஆசனங்களில் அமர்ந்து விட்டார்கள். சக்கரவர்த்தியும் குந்தவி

தேவியும் பந்தலுக்குள் வந்ததும் சபையினர் அனைவரும் எழுந்து நின்றதுடன், ஜய கோஷங்களும் வாழ்த்தொலிகளும் வாத்திய முழக்கங்களும் வானை அளாவி எழுந்தன.

## 7. திருப்பணி ஆரம்பம்

**ச**க்கரவர்த்தியும் குந்தவியும் முதலில் கோயிலுக்குள்ளே சென்று அம்பிகையைத் தரிசித்துவிட்டு வந்தார்கள். பந்தலின் நடுவில் அமைந்திருந்த சிம்மாசனங்களில் சக்கரவர்த்தியும் குந்தவிதேவியும் வந்து அமர்ந்ததும் மந்திரி மண்டலத்தாரும் மற்ற வர்களும் ஆசனத்தில் அமர்ந்தனர். கோயில் குருக்கள்மார் தொடர்ந்து வந்து சக்கர வர்த்திக்கும் மற்றவர்களுக்கும் விபூதி குங்குமப் பிரசாதங்களை அளித்து, மலர் மாலைகள் சூட்டி மரியாதைகள் செய்த பிறகு, மங்கள வாத்தியங்களின் முழக்கங் களுக்கிடையே சக்கரவர்த்தி தம் திருக் கரத்தினால் ஆசாரிய ஸ்தபதியின் தலையில் பட்டுப் பரிவட்டம் கட்டினார். பிறகு, உயர்ந்த பட்டு வஸ்திரங்களும் நூறு பொன் 'கழஞ்சு'களும் வைத்திருந்த தாம்பூலத் தட்டையும் அவரிடம் கொடுத்தார். அவற்றை ஆசாரிய ஸ்தபதி வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டார். அவ்விதமே அங்கு வந்திருந்த நூற்றுக்கணக்கான சிற்பி களுக்கும் மந்திரி மண்டலத்தார்களும் மற்ற அதிகாரிகளும் தலையில் பரிவட்டம் கட்டிவிட்டு, வஸ்திரங்களையும் பொன் 'கழஞ்சு'களையும் பரிசளித்தார்கள்.



பின்னர் மந்திரி மண்டலத்தின் தலைவ ரான விஷ்ணு சர்மர் எழுந்து சபையோரைப் பார்த்துப் பேசினார். பல்லவராஜ வம் சத்தில் தோன்றிய பெயர்பெற்ற மன்னர் களின் வீரதீர பராக்கிரமங்களை அவர் வர்ணித்தார். அவர்களில் கடைசி மன்ன ரான மகேந்திரவர்மரின் அற்புத குணாதி சயங்களைப் புகழ்ந்தார். அவருடைய அருந்தவப் புதல்வரான மாமல்ல சக்கர வர்த்தி பட்டத்துக்கு வந்த பிறகு பல்லவ சாம்ராஜ்யத்தின் புகழ் கடல்களுக்கு அப் பாலும் பரவியிருக்கிறதென்றும், அதற்கு உதாரணமாக இந்தச் சபையிலேயே ஒரு சம்பவம் நடக்கப் போகிறதென்றும், செண்பகத் தீவிலிருந்து வந்திருக்கும் பிரதி நிதிகள் தங்களுடைய தீவைப் பல்லவ சாம்ராஜ்யத்தில் சேர்த்துக் கொண்டு பரி பாலிக்கும்படி சக்கரவர்த்தியை வேண்டிக் கொள்ளப் போகிறார்கள் என்றும் விஷ்ணு சர்மர் தெரிவித்தபோது, சபையோர் தங் களுடைய குதூகலத்தைப் பலவித ஜய கோஷங்களினால் வெளியிட்டனர்.



மீண்டும் அமைச்சர் தலைவர் கூறியதாவது:- "மகாஜனங்களே! காஞ்சியும் மாமல்லபுரமும் பல்லவ சாம்ராஜ்யத்தின் இரு கண்களாகும். சாம்ராஜ்யத்துக்குத் தலைநகரமான காஞ்சி எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு துறைமுகப்பட்டினமான மாமல்லபுரம் நெடுநாளாக முக்கியமாயிருந்து வந்தது. ஆனால், காலஞ்சென்ற மகேந்திர சக்கரவர்த்தி இங்கே சிற்பத் திருப்பணியை ஆரம்பித்த பிறகு, காஞ்சியின் பெருமை சிறிது தாழ்ந்து மாமல்லபுரத்தின் புகழ் ஓங்கி விட்டது. எட்டு வருஷங்களுக்கு முன்பு நமது சக்கரவர்த்திப் பெருமான் வடதேசத்துக்குப் படையெடுத்துச் சென்ற போது, இங்கு நடந்து வந்த சிற்பத் திருப்பணியை நிறுத்த வேண்டியிருந்தது. பாதகனான புலிகேசியைக் கொன்று வாதாபியைத் தீக்கிரையாக்கிவிட்டுத் திரும்பிய பிறகு சில காலம் தேசத்திலிருந்த பஞ்சம் பிணிகளை நீக்கும் முக்கியமான பிரயத்தனங்களிலும், உள்நாட்டுச் சிறு பகைகளை அழிக்கும் முயற்சியிலும் சக்கரவர்த்தி ஈடுபட்டிருந்தார் என்பதை நீங்கள் அறிவீர்கள். பராசக்தியின் அருளினாலும், பல்லவ குலத்தின் பரம்பரையான தர்ம பலத்தினாலும், சக்கரவர்த்தி ஈடுபட்டிருந்த அந்தக் காரியங்கள் எல்லாம் இனிது நிறைவேறிவிட்டன. சக்கரவர்த்தியின் திருப்பெயரைப் பூண்ட இந்தப் பட்டினத்திலே சிற்பத் திருப்பணிகள் இன்று மறுபடியும் ஆரம்பமாகின்றன. இனிமேல் சக்கரவர்த்தியும் இந்த நகருக்கு அடிக்கடி விஜயம் செய்து திருப்பணி வேலைகளை மேற்பார்வை செய்வதாக கிருபை கூர்ந்து வாக்களித்திருக்கிறார்."

இவ்விதம் அமைச்சர் தலைவர் கூறிச் சபையோரை ஆனந்தக் கடலில் ஆழ்த்திய பிறகு, செண்பகத் தீவின் தூதர்கள் சக்கரவர்த்தியின் சமூகத்துக்கு அழைத்து வரப்பட்டனர். அவர்களுடைய தலைவன் பேசியது தமிழ்மொழியேயானாலும் சற்று விசித்திரமான தமிழாயிருந்தபடியால், சபையோர்களுக்குப் புன்னகை உண்டு பண்ணிற்று.

அந்தத் தூதர் தலைவன் கூறியதன் சாராம்சம் பின்வருமாறு:-

செண்பகத் தீவின்வாசிகள், சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் கரிகால் சோழரின் காலத்தில் சோழ நாட்டிலிருந்து அங்கே போய்க் குடியேறிய தமிழர்களின் சந்ததிகள். அந்தத் தீவை ஆண்டு வந்த ராஜவம்சம் சந்ததியில்லாமல் சில ஆண்டுகளுக்கு முன்பு நசித்துப் போய் விட்டது. ஆகவே, செண்பகத் தீவு தற்சமயம் ராஜா இல்லாத ராஜ்யமாயிருந்து வருகிறது. இதை அறிந்ததும் பக்கத்துத் தேசங்களிலுள்ள மக்கள் - முக்கியமாகத் தட்டை மூக்குச் சாதியினர் - அடிக்கடி செண்பகத் தீவில் வந்திறங்கிக் கொள்ளையிட்டும், இன்னும் பலவித உபத்திரவங்களை விளைவித்தும் செல்லுகிறார்கள். இதையெல்லாம் உத்தேசித்துச் செண்பகத் தீவின் ஜனங்கள் மகாசபையைக் கூட்டி ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதாவது தற்சமயம் தாய் நாட்டிலே பிரசித்த சக்கரவர்த்தியாய் விளங்கும் நரசிம்ம பல்லவேந்திரருக்குத் தூதனுப்பி, செண்பகத் தீவைப் பல்லவ சாம்ராஜ்யத்தில் சேர்த்துக்கொண்டு சக்கரவர்த்தியின் சார்பாகத் தீவை ஆட்சி புரிவதற்கு இராஜவம்சத்தைச் சேர்ந்த வீர புருஷர் ஒருவரை அனுப்பும்படி பிரார்த்திக்க வேண்டியது.

**சக்கரவர்த்தி, தேவிக்கு எதிரே கையில் கதாயுதம் தரித்த மகிஷாசுரனுடைய உருவத்தையும் எழுதினார்!**

சக்கரவர்த்தி, தூதர்களின் பிரார்த்தனைக்கு உடனே மறுமொழி சொல்லவில்லை. சில நாள் யோசித்தே முடிவு செய்ய வேண்டுமென்றும், அதுவரை அந்தத் தூதர்கள் பல்லவ சாம்ராஜ்யத்திலுள்ள காஞ்சி முதலிய நகரங்களைப் பார்த்துக் கொண்டிருக்கலாமென்றும், ஒரு வாரத்துக்குள் அவர்களுக்கு மறுமொழி சொல்லக்கூடும் என்றும் தெரிவித்தார்.

இதன் பின்னர் நரசிம்மவர்மரும் குந்தவி தேவியும், மந்திரிகளும், ஸ்தபதிகளும், பின் தொடர்ந்து வர துர்க்காதேவியின் கோயிலுக்கு மறுபடியும் வந்தனர். அந்தக் கோயிலின் வெளிமண்டபத்தில் இருபுறத்துச் சுவர்களும் வெறுமையாக இருந்தன. சக்கரவர்த்தி ஒரு பக்கத்துச் சுவரின் அருகில் வந்து, குந்தவி தேவியின் கையிலிருந்த காவிக் கட்டியை வாங்கி, அந்தச் சுவரில் சித்திரம் வரையத் தொடங்கினார். அருகில் இருந்தவர்கள் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நிற்கும்போதே, வெகுசீக்கிரத்தில் சிம்ம வாகனத்தின் மீது போர்க்கோலத்துடன் வீற்றிருக்கும் துர்க்கா தேவியின் திருஉருவம் அந்தச் சுவரில் சாக்ஷாத்காரமாய்த் தோன்றியது. குந்தவி தேவி பயம்தொனிந்த குரலில், ''அப்பா! தேவியின் உக்கிரம் தாங்க முடியவில்லை. யாருடன் அம்பிகை சண்டையிடுகிறாளோ அந்த அசுரனுடைய உருவத்தையும் எழுதி விடுங்கள்'' என்றாள். உடனே சக்கரவர்த்தி, தேவிக்கு எதிரே கையில் கதாயுதம் தரித்த மகிஷாசுரனுடைய உருவத்தையும் எழுதினார். ''இப்போதுதான் பயமின்றிப் பார்க்க முடிகிறது!'' என்றாள் குந்தவி. பிறகு, சக்கரவர்த்தி அங்கே அருகில் நின்ற ஆசாரிய ஸ்தபதியைப் பார்த்து, ''ஸ்தபதியாரே, இந்த விஜயதசமி தினத்தில்தான் அம்பிகை மகிஷாசுரனை வதம் செய்தாள். நமது திருப்பணியை அந்தக் காட்சியுடனேயே ஆரம்பித்து வைக்கலாமல்லவா?''என்றார். ஆசாரிய ஸ்தபதியும் வணக்கத்துடன் ஆமோதித்துத் தம் கையிலிருந்த கல்லுளியைச் சக்கரவர்த்தியின்பால் நீட்ட, சக்கரவர்த்தி அதை வாங்கிக் கொண்டு, தாம் எழுதிய சித்திரத்தின் மேல் கல்லுளியினால் சிலமுறை பொளிந்தார். பிறகு கல்லுளியை ஸ்தபதியிடம் கொடுத்தார். ஸ்தபதியார் அதைப் பக்தியுடன் பெற்றுக் கொண்டு அம்பிகைக்கும் சக்கரவர்த்திக்கும் வணக்கம் செலுத்தி விட்டுச் சிற்ப வேலையை ஆரம்பித்தார்.

அன்று முதற்கொண்டு பல வருஷ காலம் மாமல்லபுரத்தில் ஆயிரக்கணக்கான கல்லுளிகளின் சப்தம் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

## 8. குந்தவியின் கலக்கம்

*''புஷ்பேஷு ஜாதி புருஷேஷு விஷ்ணு;*
*நாரீஷு ரம்பா நகரேஷு காஞ்சி''*

என்று வடமொழிப் புலவர்களால் போற்றப்பட்ட காஞ்சி மாநகரின் மாட வீதியிலே குந்தவிதேவி பல்லக்கில் சென்று கொண்டிருந்தாள். திருக்கோயில்களுக்குச் சென்று உச்சிகால பூஜை நடக்கும்போது சுவாமி தரிசனம் செய்துவிட்டு வரும் நோக்கத்துடன் அவள் சென்றாள். ஆனால், அவளுடைய உள்ளம் மட்டும் ஒரு வாரத்துக்கு முன்பு மாமல்லபுரத்தில் விஜய தசமியன்று கண்ட கோலாகலக் காட்சிகளிலேயே ஈடுபட்டிருந்தது.

அன்று ஆரம்பித்த திருப்பணிகளில் உலகம் உள்ள வரையில் தன் தந்தையின் புகழ் குன்றாதிருக்குமல்லவா?- என்று அவள் எண்ணமிட்டாள். இப்படிப்பட்ட தந்தைக்குப் புதல்வியாய்ப் பிறக்க, தான் என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டுமென்று நினைத்தாள். இத்தகைய சக்கரவர்த்தியின் ஆட்சியில் வாழும் பிரஜைகள் தாம் எவ்வளவு பாக்கியம் பண்ணியவர்கள் என்ற எண்ணமும் தோன்றியது. இப்படிப்பட்ட சிந்தனைகளில்





ஆழ்ந்தவளாய்ப் பல்லக்கிலே போய்க் கொண்டிருக்கையில், திடீரென்று வீதியில் ஒரு மதில் சுவரின் திருப்பத்தில் அபூர்வமான காட்சி ஒன்றைக் கண்டாள். சகல இராஜ லட்சணங்களும் பொருந்திக் களை ததும்பும் முகத்தினனான ஓர் இளங்குமரன், ஒரு குதிரை மீது வந்து கொண்டிருந்தான். அவனுடைய உடம்பையும் கைகளையும் குறுக்கும் நெடுக்குமாய் இரும்புச் சங்கிலியினால் பிணைத்திருந்தார்கள். குதிரையின் இரு பக்கத்திலும் முன்னாலும் பின்னாலும் அந்தச் சங்கிலிகளைப் பிடித்துக்கொண்டு போர் வீரர்கள் சிலர் விரைந்து நடந்து வந்தார்கள்.

அந்த இளங்குமரன் மிகவும் களைத்துப் போன தோற்றமுடையவனாயிருந்தாலும், அவனுடைய முகத்தில் கொஞ்சமாவது அதைரியத்தின் அறிகுறி காணப்படவில்லை. அஞ்சா நெஞ்சங்கொண்ட தீர புருஷனாகவே தோன்றினான். 'என் உடம்பைத்தானே சங்கிலிகளால் பிணைக்க முடியும்? என் உள்ளத்தை யாராலும் சிறைப்படுத்த முடியாதல்லவா?' என்று அலட்சியத்துடன் கேட்பதுபோல் இருந்தது அவனுடைய திருமுகத்தின் தோற்றம்.

இந்தக் காட்சியைக் கண்டதும், குந்தவி தேவியின் விசாலமான நயனங்கள் ஆச்சரியத்தினால் இன்னும் அதிகமாக விரிந்தன. அதே சமயத்தில் அந்த இளைஞனும் சக்கரவர்த்தியின் குமாரியைப் பார்த்தான். சொல்லுக்கெட்டாத அவளுடைய திவ்ய சௌந்தரியம் ஒரு கண நேரம் அவனைத் திகைப்படைந்து நிற்கும்படி செய்திருக்க வேண்டும்.

**குந்தவி தேவியின் திவ்ய சௌந்தரியத்தைப் போல அவளின் தெய்வ பக்தியும் அந்நாளில் தேசப் பிரசித்தமாய் இருந்தது!**

அடுத்த நிமிஷத்தில், பல்லக்கும் குதிரையும் ஒன்றையொன்று தாண்டிச் சென்றுவிட்டன.

குந்தவி பல்லக்கிலிருந்த வண்ணம் இரண்டொரு தடவை திரும்பித் திரும்பிப் பார்த்தாள். குதிரை மீது சங்கிலியால் கட்டுண்டிருந்த அந்த இளங்குமரனும் தன்னைப் போலவே ஆவல் கொண்டவனாய்த் திரும்பிப் பார்ப்பான் என்று அவள் எதிர்பார்த்தாளோ என்னவோ, தெரியாது. ஆனால், அந்தக் குமரன் மட்டும், தலையை ஓர் அணுவளவுகூடப் பின்புறமாகத் திருப்பவில்லை. திருப்ப முடியாதபடி அவனைப் பிணித்திருந்த சங்கிலிகள்தான் தடுத்தனவோ அல்லது அவனுடைய மனத்தின் திட சங்கற்பந்தான் அவ்விதம் திரும்பிப் பார்க்காத வண்ணம் தடை செய்ததோ, அதுவும் நமக்குத் தெரியாது.

குந்தவிதேவியின் திவ்ய சௌந்தரியத்தைப் போலவே அந்தச் சக்கரவர்த்தி திருமகளின் தெய்வ பக்தியும் அந்நாளில் தேசப் பிரசித்தமாயிருந்தது. சாதாரணமாய் அவள் சிவன் கோயிலுக்குப் போனாலும், பெருமாள் கோயிலுக்குப் போனாலும், பராசக்தியின் சந்நிதிக்குச் சென்றாலும், அந்தந்தத் தெய்வங்களின் தியானத்திலே ஈடுபட்டுத் தன்னை மறந்துவிடுவது வழக்கம். ஆனால், இன்றைய தினம் குந்தவியின் மனம் அவ்விதம் சலனமற்ற தியானத்தில் ஈடுபடவில்லை. தெய்வ சந்நிதானத்தில் நின்றபோதுகூட, அவளுடைய மனக்கண்ணின் மன்னால், சங்கிலியால் கட்டுண்டு குதிரைமேல் வீற்றிருந்த இளங்குமரனுடைய முகம் வந்து நின்றது. அவள் எவ்வளவோ முயன்றும் அந்த முகத்தை மறக்க முடியவில்லை. இதுவரையில் அவள் அனுபவித்தறியாத அந்தப் புதிய அனுபவமானது அவளுக்கு ஒருவித அபூர்வ இன்பக் கிளர்ச்சியையும் அதே சமயத்தில் பயத்தையும் உண்டு பண்ணிற்று!

ஒருவாறு சுவாமி தரிசனத்தை முடித்துக் கொண்டு குந்தவிதேவி அரண்மனைக்குத்

திரும்பினாள். திரும்புங் காலையில் மனத்தை அந்த இளங்குமரன் மேல் செல்லாமல் வேறு நினைவில் செலுத்தும் முயற்சியையே அவள் விட்டு விட்டாள். 'அவ்வளவு ராஜ லக்ஷணங்கள் பொருந்திய இளங்குமரன் யாராயிருக்கலாம்? அவனை எதற்காகச் சங்கிலியால் பிணித்திருக்கிறார்கள்? எங்கே அழைத்துச் செல்லுகிறார்கள்? அவன் அத்தகைய குற்றம் என்னதான் செய்திருப்பான்?' என்றெல்லாம் சிந்திக்கத் தொடங்கினாள். திடீரென்று ஒரு ஞாபகம் வந்தது. 'உறையூர் இராஜகுமாரன் ஏதோ சக்கரவர்த்திக்கு விரோதமாகக் கலகம் செய்யப் போகிறான் என்று மாமல்லபுரத்துக்கு ஓலை வந்ததல்லவா? அது விஷயமாக முன்னமே ஏற்பாடு செய்தாகி விட்டது என்று சக்கரவர்த்தி மறுமொழி தந்தாரல்லவா? அந்தச் சோழ இராஜகுமாரன்தானோ என்னவோ, இவன்?' இந்த எண்ணம் தோன்றியதும் குந்தவிக்கு அக்குமரன்மேல் கோபம் உண்டாயிற்று. 'என்ன அகந்தை, என்ன இறுமாப்பு அவனுக்கு? எவ்வளவு பெரிய துரோகமான காரியத்தைச் செய்துவிட்டு, எவ்வளவு அலட்சியமாய்க் கொஞ்சங்கூடப் பயப்படாமலும் வெட்கப்படாமலும் இறுமாந்து உட்கார்ந்திருக்கிறான்! நரசிம்ம பல்லவேந்திரருக்கு எதிராகக் கலகம் செய்யும்படி அவ்வளவு வந்துவிட்டதா இவனுக்கு? எத்தனையோ தூரதூர தேசங்களில் உள்ள ஜனங்கள் எல்லாரும், நரசிம்ம சக்கரவர்த்தியின் வெண்கொற்றக் குடையின் நிழலில் வாழ்வதற்குத் தவஞ் செய்கிறார்களே! செண்பகத் தீவின் வாசிகள் இதற்காகத் தூது அனுப்பியிருக்கிறார்களே! இந்த அற்பச் சோழநாட்டு இளவரசனுக்கு என்ன வந்து விட்டது? ஆமாம்; இவன் மட்டும் கலகம் செய்த இளவரசனாயிருந்தால் தந்தையிடம் சொல்லிக் கடுமையான தண்டனை விதிக்கச் செய்ய வேண்டும்! அப்போதுதான் புத்தி வரும்.'

இவ்வாறு எண்ணிய குந்தவியின் மனம் மறுபடியும் சஞ்சலம் அடைந்தது. 'ஐயோ! பாவம்! முகத்தைப் பார்த்தால் அப்படியொன்றும் கெட்டவனாகத் தோன்றவில்லையே! அவன் தானாக ஒன்றும் செய்திருக்கமாட்டான். ஒருவேளை யாராவது கெட்ட மனிதர்கள் பக்கத்தில் இருந்து தூண்டிவிட்டிருப்பார்கள். அவர்களைப் பிடித்துத் தண்டிக்க வேண்டுமேயன்றி, இந்தச் சுகுமாரனைக் கடுமையாகத் தண்டிப்பதில் என்ன பயன்? அவனுடைய மார்பையும், தோள்களையும் கைகளையும் பிணித்திருக்கும் இரும்புச் சங்கிலிகள் அந்த மிருதுவான தேகத்தை எப்படித் துன்புறுத்துகின்றனவோ? நல்ல புத்தி சொல்லி, எச்சரிக்கை செய்து, அவனை விட்டுவிட்டால் என்ன? அப்பாவிடம் இராத்திரி சொல்ல வேண்டும். ஆனால் அவருக்குத் தெரியாத விஷயமா? ''தர்மராஜாதி ராஜன்'' என்று புகழ் பெற்றவராயிற்றே? நியாயமும் தர்மமும் தவறி அவர் ஒன்றும் செய்ய மாட்டார். இந்த இளங்குமரனை மன்னித்துத்தான் விடுவார்...' இப்படியெல்லாம் கொந்தளித்துக் கொண்டிருந்த உள்ளத்துடன் குந்தவிதேவி அரண்மனையை அடைந்தாள். சூரியன் எப்போது அஸ்தமிக்கும்? தகப்பனார் எப்போது இராஜசபையிலிருந்து அரண்மனைக்குத் திரும்பி வருவார் என்று எதிர்பார்த்த வண்ணம் ஒவ்வொரு வினாடியையும் ஒவ்வொரு யுகமாகக் கழித்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)



# உள்ளும் புறமும்

நவாஸ் ஷெரீஃப் பாகிஸ்தான் திரும்பி வந்தது ஏன்? அவரை உள்ளே வர விடாமல் முஷாரஃப் திருப்பி அனுப்பியது ஏன்?

1999-ம் ஆண்டு, நவாஸை அகற்றிவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார் முஷாரஃப். சவுதி அரேபியாவில் செட்டில் ஆனார் நவாஸ் ஷெரீப். ஏழு ஆண்டுகள் கழித்து மீண்டும் பாகிஸ்தானை எட்டிப் பார்த்திருக்கிறார். ஏன்? இந்த ஆண்டு நடைபெறும் பொதுத் தேர்தலில் முஷாரஃபுக்கு எதிராகப் போட்டியிடத் உட்கார்ந்திருக்க வேண்டும். பாகிஸ்தானைப் பற்றியோ அரசியல் பற்றியோ தேர்தல் பற்றியோ சிந்திக்கக் கூடாது. ஒப்பந்தம் என்றால் பிரஸ்கான்ஃபெரன்ஸ் வைத்து ஒருத்தர் கையை மற்றொருவர் பிடித்துக் குலுக்கிப் போட்டுக் கொண்ட ஒப்பந்தம் கிடையாது. அது ஓர் இரகசிய டீல்.

அப்படியானால், பத்து ஆண்டுகள் முடிவதற்கு முன்பே ஏன் நவாஸ் பாகிஸ்தான் வர வேண்டும்?

பதவி ஆசைதான். வேறென்ன? அரசியலில் ஈடுபட மாட்டேன் என்று கூடத்தான் சொல்லியிருந்தார். ஆனால், இந்த ஏழு ஆண்டுகளில் அரசியலைத் தவிர இன்





## முஷாரஃபின்

தான்.

வரும் தேர்தலில் தனித்துப் போட்டியிட்டு, தனித்து வெற்றிபெற்று ஜனநாயகத்தை ஸ்தாபிக்க விரும்புகிறார் முஷாரஃப். எதிர்க்கட்சி, மாற்றுக்கட்சி, போட்டிக்கட்சி, வெங்காயக்கட்சி போன்ற எவற்றையும் முஷாரஃப் விரும்புவதில்லை. அதனால்தான், நவாஸை சவுதிக்குத் துரத்தியடித்துவிட்டார்.

ஏன் சவுதி அரேபியா? அங்கே யார் இருக்கிறார்கள்?

வேண்டப்பட்ட ஒரு சவுதி மன்னர். முஷாரஃப், நவாஸ் ஷெரீப், மன்னர் மூன்று பேர்களும் 1999-ல் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். முஷாரஃப் நவாஸைக் கைது செய்யமாட்டார். அவர் மீது வழக்குகள் பதிவு செய்யமாட்டார். பதிலுக்கு நவாஸ் ஷெரீஃப் சவுதிக்கு ஓடிவிட வேண்டும். பத்தாண்டுகளுக்கு அங்கேயே கதவைச் சாத்திக் கொண்டு னொன்றைப் பற்றிச் சிந்தித்திருப்பாரா அவர்? நோ சான்ஸ்.

நவாஸுக்கு ஆதரவாக பாகிஸ்தானிய வக்கீல்கள் சிலரும் பொதுமக்களும் போராட்டம் நடத்துகிறார்களாமே?

உண்மைதான். ஆயிரம் குற்றச்சாட்டுகளைச் சொன்னாலும், நவாஸ் ஷெரீஃப் ஒரு பாகிஸ்தானிய பிரஜை. பாகிஸ்தானுக்குத் திரும்பி வர அவருக்கு நிச்சயம் உரிமை இருக்கிறது. பாகிஸ்தான் உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பு இது. வரவிடமாட்டேன் என்று முஷாரஃப் சொல்வது உச்சநீதிமன்ற தீர்ப்பை அவமதிப்பதாகும். ஆகவே, போராட்டம்.

பேனசிர் புட்டோவுக்கு என்னவாம்? அவரும் பாகிஸ்தானுக்குத் திரும்பி வருவாரா? அவருக்கு என்ன வேண்டுமாம்?

சுப முகூர்த்த சுப தினத்தில் நிச்சயம் வருவார். அவர் திரும்பிவர எந்தத் தடையும் இல்லை. முஷாரஃப், நவாஸ், கட்சி

நபர்கள் என்று எல்லோரிடமும் பேசிக் கொண்டிருக்கிறார். நவாஸு டன் சேரலாம் என்று முயன்று பார்த்து கைவிட்டுவிட்டார்.

பேனசிரின் கோரிக்கைகள் மூன்று: முஷாரஃப் யூனிஃபார்மைத் துறக்க வேண்டும். பாகிஸ்தானில் ஜனநாயகம் தழைக்க வேண்டும். என்னை அதிபராகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

முஷாரஃப் எதிர்காலம்?

பொதுமக்கள், மத அடிப்படை வாதிகள். இந்த இரு பிரிவினர் மட்டுமே பாகிஸ்தானில் உள்ளனர்.



# இரகசிய ஒப்பந்தம்!

இவர்கள் இருவருக்குமே ஆத்திரமூட்டி யிருக்கிறார் முஷாரஃப்.

முந்தைய உச்சநீதிமன்ற தீர்ப்பு நினை விருக்கிறதல்லவா? தலைமை நீதிபதி இஃப்திகார் சவுத்திரியைப் பதவி நீக்கம் செய்தது தவறு என்று முஷாரஃபின் தாடை யில் ஓர் இடி இடித்தது அந்தத் தீர்ப்பு. பிறகு, இஸ்லாமாபாத் மசூதி தகர்ப்பு விவகாரம். எப்பப்பார் அமெரிக்காவுடன் கைகுலுக்கல்.

'பாதை இருட்டாக இருக்கிறது. என் றாலும் நான் தொடர்ந்து நடந்துக் கொண்டே இருக்கிறேன். காரணம், தொலைவில் உள்ள வெளிச்சம் என் கண் களுக்குத் தெரிகிறது.' இது முஷாரஃபின் மனநிலை! அது ஒளி கிடையாது, அவரை நோக்கி பாய்ந்து வரும் பாஸஞ்சர் டிரைன் என்று அவருக்கு இன்னமும் புரிய வில்லை! புரிந்தாலும் பாதையை விட்டு விலக கௌரவம் இடங்கொடுக்கவில்லை!

அடுத்து என்ன?

நான்கு சாத்தியங்கள். பேனசிருடன் கூட்டுச் சேர்ந்தால் உருப்படுவதற்கு வழி உண்டு. காரணம், நவாஸைவிட பேனசிருக் குச் செல்வாக்கு சற்று அதிகம். இந்தக் கூட்டணிக்காக முஷாரஃப் நிறைய இழக்க வேண்டியிருக்கும்.

இரண்டாவது சாத்தியம் தேர்தலில் முறைப்படி போட்டியிட்டு முறைப்படி தோற்றுப்போவது. மூன்றாவது, இரவோடு இரவாக இராணுவத்தால் தூக்கி எறியப் படுவதற்கான சாத்தியம்.

நான்காவது சாத்தியம் இது: 'தேர்தலும் வேண்டாம் ஒரு வெங்காயமும் வேண் டாம். இன்று முதல் எமர்ஜென்ஸி.'

**மருதன்**

## அருள்வாக்கு

# உபகாரம்!

ஏது இன்றியமையாதது. எதெது இல்லாவிட்டாலும் வாழ்க்கை நடத்த முடியும். எதெதுகள் இல்லாமலும் நம் அப்பன் பாட்டனெல்லாரும் சந்தோஷமாகவே வாழ்ந்தார்கள் என்று ஆலோசித்துப் பார்த்துத் தேவைகளைக் குறைத்துக் கொண்டு வாழ வேண்டும். முதலில் சிரமமாக இருக்கும். சபலங்கள் இழுத்துக் கொண்டுதான் இருக்கும். இருந்தாலும் தாயான அம்பாளை வேண்டிக்கொண்டு, அநுக்ரஹ பலத்தில் தேறித் தெளிந்து ஜெயிக்க வேண்டும். அப்புறம்தான் இந்த எளிய வாழ்க்கையில் எத்தனை நிம்மதி இருக்கிறதென்று தெரியும். போக்ய வஸ்துக்களைத் தேவை தேவை என்று சேர்த்துக்கொண்டே போனால் அப்புறம் வீடு பெரிசாகப் பார்க்கவேண்டியிருக்கிறது. அதனால் வாடகைச் செலவு ஏறுகிறது. இப்படி ஒன்றிலிருந்து ஒன்றாக நமக்கே வருமானம் போதாமல் ஆக்கிக் கொண்டால் பரோபகாரம் பண்ணி நம் கர்மாவைக் கழுவிக் கொள்வதெப்படி? அநாவசியங்களை எல்லாம் கழித்துக் கட்டிவிட்டால் நமக்கும் நிம்மதியாக, பிறருக்கும் உதவியாக ஜன்மாவை உயர்த்திக் கொள்ளலாம்.



அம்பாள் தாயாக, அந்த ஒரே தாயாருக்கு நாம் அத்தனை பேரும் குழந்தைகளாக, ஒரு குடும்பத்தில் பத்துக் குழந்தைகள் இருந்தால் அவை ஒட்டிக் கொண்டு இருக்கிறார்போல், ஒருத்தருக்கொருத்தர் உபகாரம் பண்ணிக் கொண்டு வாழலாம். இந்த உபகாரம்தான் என்று generalise பண்ண வேண்டியதில்லை; அவரவர் சக்தியில் ஏது சாத்யமோ அந்த உபகாரத்தைச் செய்து கொண்டு ஆனந்தமாக வாழலாம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்



# யாரும் அநாதை

‘‘தன்னார்வ தொண்டு நிறுவனங்கள் நடத்தும் ஆதரவற்றோர் இல்லங்களில் வளரும், குழந்தைகளைத் தத்தெடுக்க இன்று நூற்றுக்கணக்கானவர்கள் காத்திருப்போர் பட்டியலில் இருக்கிறார்கள். மேலும் குழந்தையில்லா தம்பதிகள் தத்தெடுக்கும் வழிமுறைகள் தெரியாமல் விழி பிதுங்கி நிற்கிறார்கள்'' என்கிறார் தத்து விவகாரங்களின் சிறப்பு வழக்கறிஞரான கௌசல்யா பாலசந்தர்.

★ இந்து தத்தெடுத்தல் மற்றும் பராமரிப்புச் சட்டம் 1956-இல் போடப்பட்டது. இதிலுள்ள விதிமுறைகளின் அடிப்படையில்தான் இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் தத்தெடுக்க வேண்டும்.

★ சொந்தக்காரர்கள் குழந்தையையோ அல்லது விருப்பப்பட்டவர்களின் குழந்தையையோ, பெற்றோர்களின் ஒப்புதலின்பேரில் தத்தெடுத்துக் கொள்ளலாம்.

★ தத்தெடுக்கும் குழந்தையின் வயது 15-க்கு மேலிருக்கக் கூடாது.

★ தத்தெடுக்கப்படும் குழந்தை பெண்ணாக இருப்பின், தத்தெடுக்கும் ஆணுக்கும், அந்தக் குழந்தைக்கும் குறைந்தபட்சம் 21 வயது வித்தியாசம் இருக்க வேண்டும். ஆண் குழந்தையைத் தத்தெடுப்பது பெண்ணாக இருப்பின், அவருக்கும் குழந்தைக்கும் 21 வயது வித்தியாசம் இருக்க வேண்டும்.

குழந்தையில்லா தம்பதிகள்தான் தத்தெடுக்க வேண்டும் என்ற விதி ஏதும் இல்லை.

பெண் குழந்தை உள்ளவர் ஆண் குழந்தையையும், ஆண் குழந்தை உள்ளவர் பெண் குழந்தையையும் தான் சட்டப்படி தத்



தெடுக்க வேண்டும். இரட்டைக் குழந்தைகளில் ஒன்றை மட்டும் எடுக்க முடியாது. சட்டப்படி டுவின்ஸைப் பிரிக்கக் கூடாது.

★ கல்யாணமாகாத மற்றும் விதவைப் பெண்களும் தத்தெடுக்கலாம்.

★ மனைவி சம்மதத்துடன்தான் கணவன் தத்தெடுக்க வேண்டும். கல்யாணமான பெண்களும் இந்த விஷயத்தில் தனித்துச் செயல்பட சட்டம் அனுமதிக்கவில்லை.

# அல்ல!



★ கௌசல்யா

★ குழந்தையைத் தத்தெடுத்தபின், தத்துப் பத்திரம் முறைப்படி பதிவு அலுவலகத்தில் பதிவு செய்யப்பட வேண்டும். அப்படிச் செய்யப்படவில்லையென்றால், தத்தெடுக்கும் குழந்தைக்குத் தத்தெடுப்பவரின் சொத்துக்கள் சேருவதில் சட்டச் சிக்கல்கள் எழ வாய்ப்புண்டு. எல்லா ஆவணங்களையும் முறைப்படி நீதிமன்றத்தில் (சிட்டி சிவில் கோர்ட்) சமர்ப்பித்துத் தத்துக்கு அதன் ஒப்புதலையும் பெறுவது எதிர்காலத்துக்கு நல்லது.

★ பிற மதங்களில் தத்துக்கொடுப்பதோ எடுப்பதோ சட்டப்படி கிடையாது. ஆனால், அந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் யாரையாவது எடுத்து வளர்க்க வேண்டுமென்றால் Guardians and Wards Act-படி செயல்பட வேண்டும்.

★ அரசு அங்கீகாரம் பெற்ற தன்னார்வ தொண்டு நிறுவனங்களான, 'கில்ட் ஆப் சர்வீஸ்', 'கர்ண பிரயாக் பாலமந்திர் கிரைஸ்ட் ஃபெயித் ஹோம்', 'கான்கார்டு ஹவுஸ் ஆப் ஜீஸஸ்' போன்றவை தத்துக் கொடுக்கும் விவகாரங்களைக் கையாளுகின்றன.

★ ஆதரவற்றோர் இல்லங்களைக் குழந்தைக்காக அணுகும்போது, வருமானச் சான்றிதழ், மருத்துவச் சான்றிதழ் காவல் துறைச் சான்றிதழ் போன்றவற்றோடு அணுக வேண்டும். தத்தெடுக்கும் உங்களை, குழந்தை நல வாரியம் மற்றும் சமூக நல வாரிய அதிகாரிகள் தீர விசாரணை செய்வார்கள். பின்னர் குழந்தை ஒப்படைக்கப்படும். ஆனால், அடுத்த இரண்டு மூன்று மாதங்களில், நீங்கள் வளர்க்கும் முறை கண்காணிக்கப்படும்.

★ வெளிநாடு வாழ் இந்தியர்களும், வெளிநாட்டவர்களும், நேரடியாக ஆதரவற்றோர் இல்லங்களில் தத்தெடுக்க முடியாது. அவர்கள் எந்த நாடுகளில் வசிக்கிறார்களோ அந்த நாட்டின் அங்கீகாரம் பெற்ற தத்து அமைப்புகளின் மூலம் சகல ஆவணங்களையும் இந்தியாவுக்கு அனுப்ப வேண்டும். இங்கே சர்வதேச அளவில் தத்துக்கொடுக்கும் உரிமம் பெற்ற தொண்டு நிறுவனங்கள் அவற்றைப் பரிசீலித்து முறைப்படி நீதிமன்றத்தை (உயர்நீதிமன்றம்) அணுகி ஒப்புதல் பெறும். இந்த விஷயத்தில் Central Adoption Resource Agency மற்றும் Adoption Co-ordinating Agency ஆகியவற்றின் தடையில்லாச் சான்றிதழ் அவசியம்.

★ தத்தெடுப்பவர் சுட்டிக் காட்டும் குழந்தையைத்தான் கொடுக்க வேண்டும் என்ற கட்டாயம் ஆதரவற்றோர் இல்லங்களுக்குக் கிடையாது. ஏனென்றால் நிறம் மற்றும் ஊனங்களின் அடைப்படையில் பல குழந்தைகள் நிராகரிக்கப்படும் வாய்ப்புள்ளது. கூடியவரை தத்து எடுப்பவர் விருப்பம் நிறைவேற்றப்படும்.

– கௌசி







# இது 20-20

● தென் ஆப்பிரிக்கர்களுக்கு ஆஸ்திரேலியா என்றாலே கொஞ்சம் கடுப்புதான். அவர்கள் மண்ணிலேயே ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி பலமுறை தென் ஆப்பிரிக்காவின் மூக்கை அறுத்திருக்கிறது. இன்னமும் தென் ஆப்பிரிக்கா உலகக் கோப்பையை வெல்ல முடியாததற்குக் ஒரே காரணம் ஆஸ்திரேலியாதான் என்பது தென் ஆப்பிரிக்க கிரிக்கெட் ரசிகர்களின் கருத்து. 20 - 20 உலகக் கோப்பை போட்டியில் ஆஸ்திரேலியா ஆடும் ஆட்டங்களில் தெ.ஆ. ரசிகர்களின் நடத்தையில் குரோதம், ஆக்ரோஷம், வஞ்சம் எல்லாமே தென்பட்டன. தங்களுக்கு வரவேற்பு இவ்வளவு கரடுமுரடாக இருக்குமென்று ஆஸ்திரேலியர்களும் எண்ணவில்லை.

● 2010 கால்பந்து உலகக் கோப்பைப் போட்டி தென் ஆப்பிரிக்காவில் நடக்கவிருக்கிறது. அதற்கான முன்னோட்டமாக 20 - 20 உலகக் கோப்பையை சர்வலோகத்திலும் புகழ் பரப்பி வருகிறது தென் ஆப்பிரிக்கா அரசு. 20-20யின் முக்கியத்துவம் பல்வேறு வடிவங்களில் மக்களுக்குக் கொண்டு செல்லப்படுகிறது. இதற்காக வடிவமைக்கப்பட்ட டி.வி. விளம்பரங்கள் அனைவரின் கவனத்தையும் கவர்ந்திருக்கின்றன. பால், காப்பித் தூள், சர்க்கரை மூன்றையும் ஒன்றாக மிக்ஸியில் போட்டுப் பொத்தானை முடுக்கிவிடுகிறார் ஒரு பெண். சில நொடிகளில் காப்பி ரெடியாகிவிடுகிறது. மிக்ஸியை வாய்க்கு அருகே கொண்டு வந்து மடமடவென காபியை அப்படியே பருகுகிறார். உடனே திரையில் 'இது 20 - 20 ஸ்டைல் காபி' என்று வாசகம் வருகிறது!



● 20 - 20 போட்டியில் ஒரு புதியக் கலாசாரத்தையும் அறிமுகம் செய்திருக்கிறார்கள். அதாவது ஒவ்வொரு ஆட்டத்தின்போதும் பவுண்டரி ஓரம் ஐந்நூறு துறுதுறுப்பான பெண்களை நிற்கவைத்து பவுண்டரி, சிக்ஸர் மற்றும் விக்கெட் விழும் தருணங்களில் அவர்களை நடனமாடவிட்டிருக்கிறார்கள். சிக்ஸர்களும் ஃபோர்களுமாகப் பறந்த தென் ஆப்பிரிக்காவும் மேற்கு இந்தியத் தீவும் ஆடிய முதல் மேட்சில்தான் அவர்கள் மிகவும் களைத்துப் போனார்களாம்.

● உலகக் கோப்பை போட்டிகளில் ரிக்கி பாண்டிங் தலைமையில் ஆஸ்திரேலிய அணி ஓர் ஆட்டத்தில்கூட தோற்றது கிடை

ச.ந.கண்ணன்




யாது. பிமபுஷ்டியுடன் வலம் வந்த ஆஸ்தி ரேலியாவின் இந்தச் சாதனையைப் பொடி நாடான ஜிம்பாப்வே தகர்த்துவிட்டது. 20-20 தானே, ஜிம்பாப் வேதானே என்று மனப்பால் குடித்ததற்குச் சரியான அடி. நாங்கள் 20-20 ஆட்டத்தை இனிமேல் மதிக்கவுள்ளோம் என்று வெளிப்படையாகவே பேசினார் ரிக்கி பாண்டிங்.

● டெஸ்ட் மற்றும் ஒருநாள் போட்டி களில் சிறிய நாடுகளால் வெற்றி பெற முடியவில்லை. ஜிம்பாப்வே, பங்களா தேஷ் போன்ற அணிகள் மேலெழ முடி யாமல் மூச்சு வாங்குகின்றன. ஆனால், 20-20யில் அவர்களுக்கு நிறைய வெற்றி களும் நல்ல அனுபவங்களும் கிடைக் கின்றன.

நிலவைத் தொட்டுவர குருவிகளுக்கு ஓர் அரிய வாய்ப்பு.

● 20-20 உலகக் கோப்பையை வெல்லும் அணிக்கு 2 கோடி பரிசு கிடைக்கவிருக்கிறது- அடுத்த வருடம் இந்தியா, ஆஸ்தி ரேலியா, தென் ஆப் பிரிக்கா, இங்கிலாந்து ஆகிய நான்கு நாடுகளும் சேர்ந்து சேம்பியன் லீக் என்கிற 20-20 போட்டியை அக்டோபரில் நடத்தவிருக் கின்றன. இந்த நான்கு நாடு களிலிருந்தும் தலா இரண்டு அணிகள் என மொத்தம் எட்டு அணிகள். இப் போட்டியை வெல்லும் அணிக்கு 9 கோடி பரிசு. மற்ற மூன்று நாடுகளிலும் ஏற்கெனவே 20-20 முறையாக விளையாடப் பட்டு வருகிறது. இந்தியா சார்பாக இரண்டு அணிகளைத் தேர்வு செய்ய அடுத்த வருடம் ஏப்ரலில் போட்டிகள் நடக்கவுள்ளன. கண்ணை மூடி கண்ணைத் திறந்தால் ஏதாவதொரு கிரிக்கெட் மேட்ச் சைப் பார்க்க வேண்டிய கட்டாயத்துக்கு ரசிகர்கள் தள்ளப்பட்டிருக்கிறார்கள்.



● அடடா, இவர்கள் ஆடிய காலத்தில் 20-20 கிரிக்கெட் இல்லாமல் போய் விட் டதே என்று வலுக்கட்டாயமாக வருத் தத்தை வரவழைத்துக் கொண்டு, வலைத் தளக் கூட்டமொன்று ஓல்ட் லெவன் அணியைத் தேர்வு செய்திருக்கிறது. டான் பிராட்மேன், கேரி சோபர்ஸ், விவியன் ரிச்சர்ட்ஸ், இயன் போத்தம், கிருஷ்ணமாச்சாரி ஸ்ரீகாந்த், கபில்தேவ் போன்ற பழம்பெரும் வீரர்கள் 20-20க்குப் பொருத்தமானவர்கள் என்கிறார்கள் அவர்கள். இந்தப் பட்டியலில் ரவி சாஸ்திரி, கவாஸ்கர் போன்ற ஆமை வேக ஆட் டக்காரர்கள் கவன மாகத் தவிர்க்கப் பட்டிருக்கிறார்கள்!

# கலாசாரம்!




"சுத்திச்சுத்தி அடிக்கிற காத்து செத்த நாழி ஒய்ஞ்சுச்சுன்னா மானம் எப்படியும் மப்பு போட்டுரும். சுழிச்சல்ல போக... காத்து, பேயாட்டம் போடுதே..."

கொண்டை தெறிக்க முறிந்து விழுற மாதிரி காற்றில் அங்குமிங்குமா ஆடிக்கிட்டிருந்த தென்னை மரங்களைப் பார்த்து இராமாயி பெருமூச்சு விட்டாள்.

கவலைப்படாதே... அவளுக்கு நம்பிக்கை வார்த்தை சொன்னார் பூசாரி சிவலிங்கம்.

மூணு மாசமாவே சேர்வையோட தென்னந்தோப்பில் சரியான காய்ப்பு இல்லை. பாளை பிடிச்ச குரும்பை எல்லாம் தண்ணி இல்லாம பாதியிலேயே கொட்டிப் போச்சு. காய்க்கிற சமயத்தில் கொலைக்கு நாலு தேங்காக்கூட தொங்காது.

சேர்வையோட பத்து மா தோப்பை ஒட்டித்தான் ஆதனக்குள ஏரி இருக்கு. ஏரி வாமடையைப் படாதபாடு பட்டுத் தொறந்தோம்னா உள்ளங் காலு ஒட்டுற அளவுக்குத்தான் தண்ணிவரும். கருத்திருக்கிற வானம் கொஞ்சூண்டு கருணை காட்டுச்சுன்னா ரெண்டு வாரத்துக்குப் பொட்டிப் போட வேண்டிய பொழப்பு இருக்காது.

சேர்வையோட தோப்புல குடிக் கூலியா இருக்கிற இராமாயி நெத்தியில கை வைச்சு மானத்தைப் பார்த்தா.

''க்கும்... இன்னிக்கும் மழை இருக்காது. செம்மச்சனி செத்தாலும் தீராதுங்கிறது நெசந்தான்னு போச்சு.'' இராமாயி வேகமாச் சலிச்சுக்கிட்டா.

அவளாச்சும் பரவாயில்ல... தன்னோட வெசனத்தைப் புலம்பியே வெரட்டிக்கிறா. ஆனா அவ புருசன் துரைசாமி வாயில்லா அப்புராணி. அவனோட பெரும்படியான ஆசை ஒரே பையனான இரவியைப் பெரும் படிப்புப் படிக்க வெச்சிடணும்

**எஸ். சஞ்சய் ராமசாமி**

# காட்டாமணக்கு

கிறதுதான். ஆனா ஒண்ணாப்பு படிக்கிற இரவி இன்னிக்கு மனசுல என்ன நெனைச்சானோ...

'பள்ளிக்கூடத்துக்கே போக மாட்டே'ன்னு சொல்லி, அடம் புடிச்சிட்டான். துரைசாமி எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தும் இரவி அசைஞ்சு கொடுக்கலை.

''காச்சட்டையில இருக்கிற ஓட்டைய எல்லா பசங்களும் கிண்டல் பண்றாங்க. எங்க தாத்தாவுக்கு லெட்டரைக் கொடுத்திருன்னு சொல்லிக் காச்சட்டை ஓட்டையில் பேப்பரைச் சொறுகுறாங்க. நா போகவே மாட்டேன்.''

''இப்பத்தானேப்பா பள்ளிக்கூடம் தொடங்கிருக்கு. இன்னும் ஒரு மாசம் மட்டும் பொருத்துக்க, நல்ல காச்சட்டையும் மேச்சட்டையும் எடுத்துத் தந்தர்றேன். அப்புறம் ஒன்னத்தான் எல்லாரும் புது மாப்ளன்னு சொல்லுவாக''- மெல்லமாய்த் தழுவக் கட்டி மகனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப் பார்த்தான் துரைசாமி.

ஆனா இரவி அதுக்கெல்லாம் அசங்குற மாதிரி தெரியலை. கெஞ்சிக் கெஞ்சிப் பார்த்த துரைசாமிக்குக் கோபம் பொத்துக்கிட்டு வந்திருச்சு. பக்கத்தில் கெடந்த ஒரு காட்டாமணக்குக் குச்சியை எடுத்து அடியோ அடின்னு ரவியை அடிச்சு, பள்ளிக் கூடத்தில் இழுத்துக் கொண்டுபோய் விட்டுட்டு வந்துட்டான்.

**ம**ணி, சாயங்காலம் நாலரையைக் காட்டி நிக்குது. மானம் தொவைச்சப் பிழிஞ்ச வேட்டி மாதிரி வெளிவாங்கிக்கிடந்துச்சு.

பள்ளிக்கூடத்திலேர்ந்து வீட்டுக்குத் திரும்பிய இரவிக்கு உலகமே வெறுப்பா தோணுச்சு. காலையில அப்பா அடிச்சது மறுபடியும் ஞாபகமா வந்து அவனை அவமானப்படுத்தி அழ வெச்சிருச்சு.

எங்கேயோ வெறிச்சுப் பார்த்துக்கிட்டு வந்தவன் சேர்வையோட தோப்புக்குள்ள காலடி எடுத்து வைச்சப்ப ஏதோ தண்டு புடற மாதிரி இருந்தச்சு. குனிஞ்சு என்னன்னு பார்த்தவனுக்குக் கோபம் பொங்கிக் கௌம்பிடுச்சு.

அது வேறொண்ணுமில்ல. காலையில இரவியை பின்னி எடுத்த காட்டாமணக்குக் குச்சிதான்! அப்பா மேல இருந்த கோபமெல்லாம் காட்டாமணக்குக் குச்சி மேல திரும்பிடுச்சு ரவிக்கு.

பைக்கட்டை கீழே வைச்சிட்டு அந்தக் காட்டாமணக்குக் குச்சியைக் கோவமா எடுத்தான். பறபறன்னு கையாலேயே குழி பறிச்சான். அந்தக் குச்சியைப் படுக்கை வசத்தில் குழிக்குள்ள போட்டுப் பொதைச்சிட்டான்.

''என்னைய நல்லா அடிச்சியல்ல... கண்ண மூடி செத்துப்போ... நல்லா செத்துப் போ!''

அடிச்ச குச்சியை ஆசை தீர பழி

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

இளம் வயதிலேயே வித்தியாசமான பாத்திரங்களை விரும்பி ஏற்றுச் செய்து வருபவர் ஜீவா. " 'தமிழ் எம்.ஏ' முழுக்க முழுக்க உணர்வுகளால் நெய்யப்பட்ட கவிதையாக வளர்ந்து வருகிறது. இப்படத்துக்காக நான்கு விதமான கெட்டப்பில் நடித்துள்ளேன். ஒவ்வொன்றும் பிரத்யேகமாக எனக்கு மிகப் பிடித்தமானவை. தமிழில் எம்.ஏ. முடித்த ஒருவனை இந்தச் சமுதாயம் நடத்தும் விதமும், எப்படி அவன் அவற்றை எதிர்கொள்கிறான் என்பதையும் யதார்த்த மாகப் பதிவு செய்துள்ளோம். எனக்கு இணையாக அஞ்சலி. இவருக்கு இது முதல் படமென்று சொன்னால் நம்ப முடியாது. இதுவரை காமெடியாக மட்டுமே நாம் பார்த்து வந்த கருணாஸ், 'யுவான்சுவாங்' என்னும் குணச்சித்திர வேடத்தில் நம் நெஞ்சங்களில் அழுத்தமாய் அமர விருக்கிறார். படத்தின் இயக்குநர் ராமு. புதியவர். இப்படி ஒரு கருவைச் சொன்னபோதே படத்தின் வெற்றியை என்னால் முன்பே கணிக்க முடிந்தது. நம்பிக்கையின் பேரில் நாட்களை ஒப்படைத்து மிகத் தீவிரமாக வேலை செய்து வருகிறோம். தமிழுக்கு மரியாதை செய்வது ரசிகர்களின் கையில்தான் இருக்கிறது" என்கிறார் ஜீவா.

அது சரி, 'எம்.ஏ' என்பதை 'முதுகலை' என்று மாற்றாவிட்டால் தமிழ்ப் பெயர் ஆகாதே.

- மயில்



காட்டாமணக்குக் குச்சியைக் கட்டாந் தரையில போட்டாக்கூட அது மொளைச்சிடும்கிறது எல்லாருக்கும் தெரியும். ஆனா பச்சப்புள்ள இரவிக்கு இதெல்லாம் எப்படித் தெரியும். அவனைப் பொருத்தமட்டும் அந்தக் காட்டாமணக்கு ஆயிரம் ரோஜா செடிக்குச் சமம். அவனோட உருவாக்கம். தெனமும் அந்தக் காட்டாமணக்குச் செடியே கதின்னு கெடந்தான் இரவி. பள்ளிக் கூடத்தில் நடந்த கதைகளை எல்லாம் அந்தச் செடிகிட்ட சொல்லிச் சிரிப்பான்.

இரவியோட வெள்ளந்தியான பாசத்தாலயோ என்னவோ... காட்டாமணக்குச் செடி கடகடன்னு ஆள் உசரத்துக்கு வளர்ந்திருச்சு.

துரைசாமியும் ராமாயியும் தலையில் இடி விழுந்த மாதிரி புலம்பிக் கிடந்தாக. நேத்து இவுக வீட்டுக்கு வந்த மொதலாளி சேர்வை "என்னெ மன்னிச்சிர்றா தொரை... இந்தத் தோப்பில் சரியான வரும்படி இல்ல. மகளுக கல்யாணத்தினால கடன் கப்பியும் கூடிப் போச்சு. வட்டி கட்டி மாளலை. அதான் ரெண்டு நாளைக்கு முன்னால நம்ம நடேசதேவர்கிட்ட இந்தத் தோப்பை விலைக்குக் கொடுத்திட்டேன். ஒன்னைய நெனைக்கவே கஷ்டமா இருக்குடா. இத்தினி வருஷம் எந்தோப்புல ஜீவனம் பண்ணிட்ட. எனக்கு வேற வழி தெரியலைடா..."ன்னு சொல்ல, ரெண்டு

வாங்கிய மாதிரி இருந்துச்சு. நிம்மதியா வீட்டுக்கு நடந்தான் ரவி.

நாலைஞ்சு நாளுங்க ஓடியிருக்கும். வழக்கமா பள்ளிக்கூடத்துக்குப் போய் வார இரவி யதேட்சையா காட்டாமணக்குக் குச்சியைப் பொதைச்ச இடத்தைப் பார்த்தான். அவனுக்குப் பரவசம் தாங்கலை...

அவனால பொதைக்கப்பட்டுக் கிடந்த காட்டாமணக்குக் குச்சியிலேர்ந்து அழகா ஒரு தளிர் மொளைச்சிருந்துச்சு. ரவியால நம்பவே முடியலை. ஆசையா மொளைச்சிருந்த பிஞ்சு எலைகளைத் தொட்டுத் தடவிப் பார்த்தான்.

"நா இனிமே ஒன்னைய அடிக்க மாட்டேன். இது மாரியாத்தா சத்தியம். தெனமும் நானே ஒனக்குத் தண்ணி ஊத்துறேன்."

கொஞ்சிக் கொஞ்சிப் பேசினான்.

பெருக்கும் குலையே ஆடிப் போச்சு.

சேர்வைகிட்ட தோப்பை வாங்கிய நடேச தேவர், ''ரெண்டு மூணு நாளுல குடிசையைக் காலி பண்ணிக்கங்க. நாங்க தோப்பைச் சுத்தம் பண்ணப் போறோம்''னு அதட்டலா சொல்லிட்டுப் போனார்.

இரவிக்கு இந்த வருத்தமெல்லாம் புரிகிற வயசில்லை. செழிச்சு வளர்ந்திருந்த காட் டாமணக்குச் செடிக்குத் தண்ணி ஊத்தி முத்தம் கொடுத்திட்டுப் பள்ளிக் கூடத்துக் குப் போனான்.

எப்படா மணி அடிக்கும்னு எதிர்பார்த் துக்கிட்டே இருந்து சாயங்காலம் வீட்டுக்கு ஓடி வந்த இரவி ஆசையாய்க் காட்டா மணக்குச் செடியைப் போய்ப் பார்க்க, அப்போதான் அந்தக் கொடூரம் கண்ணுக் குத் தெரிஞ்சுச்சு.

அவனோட கூட்டாளியா வளர்ந்து செழிச்சிருந்த காட்டாமணக்கை வேரோட வெட்டி விசி இருந்தாங்க நடேச தேவரின் வேலையாளுங்க.

''யார் எஞ்செடியை வெட்டுனது. நா இனிமே யார்கிட்டே பேசுவேன். யார்கிட்ட சிரிப்பேன்.''

தரையில விழுந்து பொரண்டு அழு தான் இரவி. அவன் எதுக்கு அழுவுறான்னு கூடத் தெரியாம வெட்டின காட்டா மணக்கைக் குப்பையில வீசி எறிஞ்சாங்க வேலையாளுங்க.

அழுகையோடவே வீட்ல வந்து படுத் திட்டான் ரவி. அவனுக்கு ஒலகமே இருண்டு போற மாதிரி இருந்துச்சு. தேம்பித் தேம்பி அழுததில் ஒடம்பு அனலா கொதிக்கக் காய்ச்ச வந்திடுச்சு.

ரெண்டு மூணு நாளா காய்ச்ச கொறை யலை. 'இருக்கிற வெசனத்தில இது வேறயா'ன்னு புலம்பிகிட்டே இராமாயி டவுனு ஆஸ்பத்திரியில போய் மாத்திரை வாங்கிக் கொடுத்தா. இலேசாக் காய்ச்ச கொறைஞ்ச மாதிரி இருந்துச்சு.

**பொ**ழுது விடிந்தது.

நாலு நாளா வீட்டுக்குள் ளேயே மொடங்கிக் கெடந்த ரவி வெளியே வந்தான். முகமெல்லாம் சோகத்தில் உப்பலாய் வீங்கிப் போயிருந் தது.

அவனோட கூட்டாளி அழைக்கிற மாதிரி பிரமை தட்டுச்சு. காட்டாமணக்கு வெட்டி வீசப்பட்ட குப்பைய நோக்கி நடந் தான் ரவி.

''எங்கூட்டாளி இந்நேரம் காஞ்சி கருகிப் போயிருக்கும்.''

நினைக்கிறப்பவே இரவிக்கு அழுகை முட்டிச்சு. குப்பை கிட்ட போனான்.

எந்த மண்ணிலயும் சுலபமா மொளைச்சிடுற காட்டாமணக்கு அந்தக் குப்பையிலேர்ந்தும் புதுசா துளிர்விட்டு வளர்ந்திருந்துச்சு. இரவிக்கு ஆச்சரியம் தாங்கலை. அந்தத் தளிரை ஆசையா போய்த் தொட்டுப் பார்த்தான்.

மனசு குதூகலிக்க வீட்டைப் பார்த்து ஓடினான். துரைசாமியும் ராமாயியும் தலை யில கை வைச்சுப் புலம்பிக்கிட்டு இருந் தாங்க.

பக்கத்தில் போனான் ரவி. அழுத்தமா சொன்னான்:

''கவலைப்படாதீங்கப்பா... நாம எங்கே போனாலும் பொழைச்சுக்கலாம்.''



''ஆபரேஷன் முடிந்து போய் இப்ப வந்து ஜென்ரல் செக்கப் செய்யப் சொல்றீங்களே ஏன்?''

''உடம்புல எல்லா உறுப்புகளும் இருக்கு தான்னு தெரிஞ்சுக்கத்தான்.''

– இரா. செயபாலன்



## மரத்து நிழல்ல வளர்றவங்க மகராசிங்க தெரியுமா!

வழிபாடு செய்துவர நற்பலன் ஏற்படும்.

**மிதுனம்** : தெய்வ அனுகூலம் நிறைந்த வாரம். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். முறைமுக எதிர்ப்புகள் விலகும். உடல் நிலை நன்றாக இருக்கும். தூரதேச அழைப்புகள் வந்து சேரும். மகான்களின் தரிசனம் கிட்டும். வேலையில் நற்பெயர் ஏற்படும். தொழில்துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சுபச்செலவுகள் வந்து சேரும்.

**கடகம்** : திருமணக் காரியம் கைகூடும்.

# நடக்குமென்பார்;

**மேஷம்** : மன தைரியமும் தன்னம்பிக்கையும் நிறைந்த வாரம். முயற்சி செய்யும் காரியத்தில் வெற்றியை அடைவீர்கள். குழந்தைகள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். ஆரோக்கியம் சீராகும். கல்வி வளம் சிறப்பு பெறும். பாகப்பிரிவினை ஆகும். சிலருக்கு உத்தியோகத்தில் இடம் மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்** : உல்லாசமான வாரம். வெளியூர் பயணங்கள் வந்து சேரும். மனச்சலனம் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். எதிர்ப்புத் தொல்லை நீங்கும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். வழக்கு வெற்றி அளிக்கும். ஊதிய உயர்வு கிடைக்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். ராகு/சனி/கேது/

பணக்கஷ்டம் இருக்காது. வீடு / மனை வாங்க நல்ல தருணம். உடன் பிறந்தவர்களால் நல்ல பயன் அடைவீர்கள். உத்தியோகத்தில் இடமாற்றம் ரெடி. உணவு கட்டுப்பாடு அவசியம். உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்தவும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்** : மன குழப்பம் விலகும். தடைகள் விலகி திருமணம் கைகூடும். வேலை பளு அதிகரிக்கும். நீண்ட தூர பயணம் வந்து சேரும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர் / உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். நீண்ட கால கடன் தொல்லை தீரும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். எதிர்ப்புத் தொல்லை தீரும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண் டாகும்.

**கன்னி** : திடீர் தனயோகம் ஏற்படும்.

உடல் ஆரோக்கியம் சீராகும். வீட்டில் சுபநிகழ்ச்சிகள் தொடங்கும். எதிர்பாராத பிரயாணம் வந்து சேரும். உடன்பிறந்தவர்களால் ஆதாயம் கிட்டும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். நீண்ட கால கடன் தொல்லை தீரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம் :** வீடு / மனை மூலம் ஆதாயம் பெறுவீர்கள். மகப்பேறு பாக்கியம் கிட்டும். பூர்வீகச் சொத்துகள் பாகப் பிரிவினை ஆகும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். வழக்கு வெற்றி அளிக்கும். குழந்தைகள் மூலம் மன மகிழ்ச்சி ஏற்படும். கடன் தொல்லை தீரும். சத்ரு தொல்லைகள் ஒழியும். ராகு / கேது வழிபாடு செய்துவர

# நடக்கும்!

நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம் :** குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வாக்கு வன்மை மேலோங்கும். நீண்ட தூர பிரயாணம் வந்து சேரும். சிலருக்கு உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். புதிய வீடு / மனை வாங்க ஏற்ற காலம். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. மனச் சலனம் விலகும். தொழில்துறையில் நல்ல முன்னேற்றம் கிட்டும். ராகு/கேது/குரு/ சனி வழிபாடு செய்துவர நன்மை கிட்டும்.

**தனுசு :** மேன்மையான வாரம். புண்ணிய ஸ்தலம் சென்று பிரார்த்தனை நிறைவேறும். மகான்கள் தரிசனம் கிட்டும். புதிய வீடு / மனை வாங்கும் யோகம் கிட்டும். கடன் தொல்லை விலகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வேலையில் சிலருக்கு இடம் மாற்றம் ஏற்படும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம் :** திருமணம் கைகூடும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. யாரிடமும் வாக்குவாதம் செய்யக்கூடாது. பணக் கஷ்டம் இருக்கும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். முறைமுக எதிர்ப்புகள் விலகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பொறுப்பான பதவிகளில் உள்ளவர்கள் உஷார். வழக்கு இழுபறி ஆகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

## 23.9.07 முதல் 29.9.07 வரை

**கும்பம் :** திருமணம் தடை விலகி நடக்கும். வேலை பளு அதிகரிக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். குடும்ப வாழ்வில் அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. உடல் நிலை பாதிக்காது. தனமேன்மை உண்டாகும். குழந்தைகள் மூலம் மன மகிழ்ச்சி ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். வேலையில் மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வராத நிலுவைகள் வந்து சேரும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வர நன்மை உண்டா கும்.

**மீனம் :** மேல்நாட்டு பிரயாணம் வந்து சேரும். திருமணக் காரியம் நடக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். வழக்கு வெற்றி பெறும். பரிகாரம் தேவையில்லை. ●

தஞ்சை பரத்வாஜ்

# பெண்களுக்கு மட்டுமா ஃபோலிக் ஆசிட்?

ஃபோலிக் அமிலம் என்றாலே, பெரும்பாலானோர்; 'இரும்புச் சத்துள்ளது; பெண்களுக்கானது; கர்ப்பிணிப் பெண்கள் பயன்படுத்துவது' என்று உடனடியாகக் கருத்து சொல்வர். என்னிடம் வரும் கேஸ்களில் ஆண்களுக்கு இதை எழுதிக் கொடுத்தால், உடனடியாக ஏதோ நடக்கக்கூடாதது நடந்தது போல பதறுவார்கள். 'ஃபோலிக் ஆசிட்... என் மனைவி கருவுற்றிருந்தபோது அவளுக்கல்லவா டாக்டர் இதைப் பரிந்துரைத்தார்? எனக்கு எதற்கு சம்பந்தமில்லாமல்?' என்பார்கள்.

சரி, இந்த ஃபோலிக் ஆசிட் என்பது என்ன? 'பி.காம்ப்ளக்ஸ்' வைட்டமினில் ஒரு பகுதிதான் ஃபோலிக் ஆசிட். இந்தச் சொல் இலத்தீன் மொழியிலிருந்து வந்த ஃபோலியம் என்ற சொல்லிலிருந்து வந்தது. ஃபோலியேஜ் என்னும் பசுந்தழைகளிலிருந்து இந்த ஊட்டச்சத்து பெறப்படுவதால்தான் இந்த சொல்லாட்சி.

இரத்தத்திலுள்ள சிவப்பணுக்களைப் பெருக்குவதும், பதப்படுத்துவதும்தான் ஃபோலேட் எனும் ஃபோலிக் ஆசிட்டின் முக்கியப் பணி.

கருவுற்ற அறிகுறி தெரிந்தது முதலே ஃபோலேட் ஊட்டச்சத்தைக் கொடுத்து வந்தால், பிறக்கும் குழந்தைகளுக்கு நரம்புக் குழாய்க் கோளாறுகளையும், முதுகெலும்பில் தோன்றும் விரிசல் போன்ற பிறவியிலேயே ஏற்படும் குறைகளையும் தவிர்த்துவிட முடியும். இத்தகைய பிரச்னைகளுடன் பிறந்த குழந்தைகளுக்கு நல்ல ஊட்டச்சத்து நிறைந்த உணவுப் பொருட்களைக் கொடுத்ததில் 19 சதவிகிதத்தினர் உடனடியாகக் குணமடைந்துள்ளனர் என்று அமெரிக்காவின் நோய்க் கட்டுப்பாடு மற்றும் தடுப்பு மையம் தெரிவித்துள்ளது.

ஃபோலேட் நிறைந்த மல்ட்டி வைட்டமின்களைக் குறைந்தபட்சம் பதினைந்து ஆண்டுகள் வரை உட்கொள்ளும் பெண்களுக்கு, குடல் புற்றுநோய் 75 சதவிகிதம் வர வாய்ப்பில்லை என்று ஹார்வர்டு ஹெல்த் ஸ்டடி கூறுகிறது. தினமும் 6 மி.கி.-க்கு மேல் ஃபோலேட் எடுத்துக் கொள்ளும் பெண்களுக்கு மார்பகப் புற்று நோய் வருவதற்கான வாய்ப்புக் குறைகிறது. அத்துடன் நுரையீரல் மற்றும் உணவுக் குழாயில் தோன்றும் புற்றுநோயை விரட்டி விடுகிறதாம்.

ஃபோலேட் குறையும்போது வலிப்பு, இதய நோய்கள் மற்றும் மூளைச் செயலிழப்பு வரக்கூடும்.

ஈறுகள், தோல், இரைப்பை போன்ற முக்கிய உடல் உள்ளுறுப்புகளின் இயக்கத்துக்கும் ஃபோலேட் உதவி செய்கிறது.

உடலில் ஃபோலிக் ஆஸிட் குறைந்தால் நாக்கு மற்றும் வாயில் எரிச்சல், முடி கொட்டுதல், தோலின் நிறம் மாறுதல், மன அழுத்தம், வயிற்றுப்போக்கு, மன அளவிலான குழப்பம், நரம்பு இயக்கத்தில் கோளாறுகள் ஆகியவை ஏற்படும்.

சத்துக் குறைவான உணவு அல்லது சத்துக்கள் தொலையும் அளவுக்கு மிகுதியாய்ச் சமைக்கப்பட்ட உணவு மட்டுமே சாப்பிடுதல், ஏனோதானோவென்று சாப்பிடுவது போன்ற காரணங்களால் ஃபோலேட் குறைவு ஏற்படுகிறது. மது அருந்துவோர், கர்ப்பிணிப் பெண்கள், வயது முதிர்ந்தோர், கைக்குழந்தைகள், ஃபாஸ்ட் ஃபுட் வகைகளைத் தொடர்ந்து உண்போர், பசியின்மை / உணர்ச்சிவசப்படுவதால் அவதிப்படுவோர், சோரியாஸிஸ் நோயுள்ளவர்கள் ஃபோலிக் ஆஸிட்டை தாராளமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

ஃபோலிக் ஆஸிட் என்பது உடலிலேயே உற்பத்தி ஆகக்கூடியது அன்று. எனவே, பச்சை காய்கறிகளையும், ஆரஞ்சு போன்ற பழ வகைகளையும் சாப்பிடாதவர்கள், வைட்டமின் மாத்திரையாகவும், டானிக்காகவும் உட்கொள்ள வேண்டும். பச்சை காய்கறி என்று இங்கே குறிப்பிடுவதற்கும் காரணம் உண்டு. சமைக்கப்படும்போதும், பதப்படுத்தும் போதும் காய், கனிகளில் உள்ள ஃபோலிக் ஆஸிட்டை 50 சதவிகிதம் முதல் 90 சதவிகிதம் வரை நாம் இழந்து வருகிறோம். எனவே, பச்சை காய், கனிகளையே தொடர்ந்து உட்கொள்வது மிகவும் இன்றியமையாதது.



குறைந்த நீரிலோ, நீராவியிலோ வேக வைத்தல் அல்லது மிதமாக வதக்குதல் மிகவும் நலம். வைட்டமின் 'சி', காய்களில் உள்ள ஃபோலிக் ஆஸிட்டைக் காப்பாற்றும் ஆற்றல்கொண்டது. எனவே ஓர் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்துவிட்டால், ஃபோலிக் ஆஸிட்டை அப்படியே தக்க வைத்து விடும். இனியென்ன? பசுங்காய்களையும் கனிகளையும் தாராளமாக உட்கொண்டு, உடலுறுப்புகளை எளிய முறையில் வலிமைப்படுத்திக் கொள்ளுங்களேன்!

**- இஷி கோஸ்லா**

நன்றி : சன்டே எக்ஸ்பிரஸ்

தமிழில் : **சா.ஜெயராஜ்**



# உயிரோட்டமுள்ள

சுஜாதாவின் 'வாரம் ஒரு பாசுரம்' ஒவ்வொரு வாரமும் அற்புதமா இருக்கு. இந்த விஞ்ஞான எழுத்தாளருக்குள் இவ்வளவு அற்புதமான ஆன்மிக எழுத்து இருக்கறதை நினைச்சு ஆச்சர்யப்படறேன். அட்டையில தயவு செய்து சினிமாக்காரங்களைப் போடாதீங்க. மற்ற பத்திரிகைகள் செய்யட்டும். கல்கிக்கு அது தேவையில்லை!

**– பொருநை பாலு, திருநெல்வேலி**

* எஸ்.சங்கரன்

* மைதிலி சேஷாத்ரி

* பொருநை பாலு

சினிமாக்காரங்க ஒதுக்கப்பட வேண்டியவங்க இல்லை. அதுவும் ஒரு கலைதான். ஜனரஞ்சகமான பொழுதுபோக்கு நிறைஞ்ச கலை. இந்த வாரம் இரண்டு இசைக் கலைஞர்கள் படம் போட்டு அவர்களின் திறமைகளைச் சொல்லியிருக்கீங்க. போன வாரம் பார்த்திபன் படம் போட்டீங்க. அவர் ஒரு திறமையான நடிகர். இப்படி ஒவ்வொரு துறையிலும் திறமைசாலிகள் இருக்காங்க. அதனால் சினிமா பிரபலங்களை வெளியிடறதில் தப்பே இல்லை. கல்கி எங்க குடும்பத்தின் ஓர் அங்கம். சாப்பாடு, தூக்கம் மாதிரி, கல்கி எங்களுக்கு அத்தியாவசியம். குடும்பம் முழுக்கப் படிக்கிறது கல்கியைத்தான். அது உயிரோட்டமுள்ள ஓர் உறுப்பினர்!

**– மைதிலி சேஷாத்ரி, ஸ்ரீரங்கம்**

எங்களுடையது பெரிய குடும்பம். சின்ன வயசுல கல்கி வீட்டுக்கு வந்ததும் படிக்கிறதுல போட்டி

# உறுப்பினர்!



நடக்கும். என் பெரிய அண்ணன் ரொம்ப கண்டிப்பானவர். ஆபாசம் எதுவும் இருக்காதுங்கறதால கல்கியை மட்டும்தான் கேள்வி கேட்காம படிக்க அனுமதிப்பார். மற்ற பத்திரிகையா இருந்தா வாங்கிப் புரட்டிப் பார்த்துட்டுதான் கொடுக்கலாமா, வேண்டாமான்னு முடிவு செய்வார். தராசு பதில்கள் சிறப்பா இருக்கு. அறிவியல் சார்ந்த பகுதியும், கிராமப்புறங்களில் வசிக்கும் திறமைசாலிகளை அறிமுகம் செய்யும் பகுதியையும் எதிர்பார்க்கிறேன்.

– எஸ்.சங்கரன்,
சென்னை

* சி.ஆர்.நாகராஜன்



'கிளைச்சாலை' பகுதியில் வருகிறவர்களைப் பற்றிப் படிக்கும்போது திரைக்குப் பின்னாடி உழைக்கிற பல திறமைசாலிகளைப் பற்றித் தெரிஞ்சுக்க முடியுது. இந்த வாரம் வண்ணதாசன் சிறுகதை எக்ஸலண்ட்! இது போன்ற நல்ல சிறுகதைகளை வெளியிடறதோடு எழுத்தாளர்களின் பேட்டியையும் வெளியிடுங்க. 'பார்த்திபன் கனவு' ஏற்கெனவே படிச்சதுதான், ஆனாலும் கல்கியின் எழுத்தோட்டம் சலிப்பில்லாம மீண்டும் படிக்க வெக்குது.

– இதயா ஏகராஜ்,
கல்லக்குடி

* இதயா ஏகராஜ்

'பார்த்திபன் கனவு' தொடருக்கு 'ஸ்யாம்' வரையும் சித்திரங்கள் உயிரோட்டமா இருக்கு. இந்த வாரம் யானை மேல நரசிம்ம பல்லவரும், குந்தவியும் வர்ற காட்சி அருமை. யானை மேல இருக்கிற பல்லவருக்கு இலேசா சாய்ந்து இருக்கறதும், யானையின் கண்ணும் மிக நுணுக்கமா வரையப்பட்டிருக்கு. தலையங்கமும் கார்ட்டூனும் அற்புதம். புத்தக விமர்சனம் வெளியிடும்போது ரெண்டு வரியில மட்டும் இல்லாம, ஒரு பக்கத்துக்கு விரிவா குறிப்பிட்டா சிறப்பா இருக்கும். படிக்கிறவங்களுக்கும் வாங்கற ஆர்வத்தைத் தூண்டும். சினிமா சம்பந்தப்பட்ட செய்திகள் ஆபாசமில்லாமல் கண்ணியமாகவும், படிப்பதற்கு சுவாரஸ்யமாகவும் இருக்கிறது.

– சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

வாரம் ஒரு பாசுரம்

அகைப்பு என்ற ஒரு சொல்லை இந்த வாரம் கவனிப்போம். தமிழில் நாம் இழந்த பல நூறு அழகான சொற்களில் இதுவும் ஒன்று. அகைப்பு என்றால் செயல்; சிருஷ்டி; பிரயத்தனம்.

திருமாலின் சிருஷ்டி அல்லது பிரயத்தனத்தால் ஏற்படுகிறவை எவை?

திருமழிசை ஆழ்வார் 'நான்முகன் திருவந்தாதி'யில் ஒரு முழுப் பட்டியலே தருகிறார். வானம், பரவும் தீ, காற்று, பெரிய கடல், உயர்ந்த மலை, வெப்பமான

# திருமாலின் அகைப்பு

50

சூரியன், குளிர்ந்த சந்திரன், உயரத்தில் ஓடும் மேகங்கள், சுற்றிலுமுள்ள எட்டுத் திசைகள், இவற்றுடன் அண்டமும் திருமாலின் சிருஷ்டி என்கிறார் எதையும் விட்டுவைக்காமல்.

***''வான், உலவு தீ வளி, மா கடல்,***
***மா பொருப்பு,***
***தான் உலவு வெம் கதிரும் தண்***
***மதியும், - மேல் நிலவு***
***கொண்டல் பெயரும், திசை***
***எட்டும், சூழ்ச்சியும்,***
***அண்டம் திருமால் அகைப்பு.***

(வளி - காற்று, பொருப்பு - மலை, கொண்டல் - மேகம், பெயரும் - அசையும், சூழ்ச்சி - சுற்று, அகைப்பு - செயல், சிருஷ்டி)

இந்த ஒரு சிறிய வெண்பாவில் நம் தமிழில் வழக்கொழிந்து விட்ட சொற்களான வளி, பொருப்பு, கொண்டல், அகைப்பு போன்றவற்றை எண்ணி ஒரு சொட்டுக் கண்ணீர் விடுவோம். 'சூழ்ச்சி' அர்த்தம் மாறிப் பிழைத்துக் கொண்டு விட்டது.

(படிக்கலாம்)

சுஜாதா

# ஐஸ்வர்யாவின் அரங்கேற்றம்!

குழந்தை ராதா ஒரு சமயம் விளையாடுவதற்கு வைத்திருந்த கோலிக் குண்டை வாயில் போட்டு விழுங்கிவிட்டாள்! அம்மா எம்.எஸ். வெளியே சென்றிருந்தார். வீடு திரும்பியதும் இந்த விஷயத்தைக் கேள்விப் பட்டார். ''ஹா'' என்றார். மயங்கி விழுந்து விட்டார்.

அம்மா எம்.எஸ்.சுப்புலட்சுமிக்கு மகள் ராதாவிடம் அத்தனை பாசம்! பத்து வயதில் அம்மாவுடன் மேடை ஏறி சேர்ந்து பாட ஆரம்பித்தார் ராதா. ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் ஒரு கச்சேரி விடாமல் அம்மாவுக்குப் பக்கபலமாக உடன் பாடி வந்தார்.

கடுமையான ஒரு காய்ச்சலால் பாதிக்கப்பட்டு உடல் தளர்ந்து போகும்வரை இந்தப் பணி தொடர்ந்தது. அதன்பிறகு, வாழ்க்கை சக்கர நாற்காலியோடு இணைந்த போதிலும் ராதா மனம் தளரவில்லை. மேடை ஏறிப் பாடாவிட்டாலும் தம்மை நாடி வந்த கலைஞர்கள், இளைஞர்கள் அனைவருக்கும் பாட்டு சொல்லிக் கொடுத்து வந்தார்.

எனவேதான், 'பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு ராதா மறுபடி மேடையில் தோன்றி கச்சேரி செய்யப் போகிறார்' என்றதும் சதாசிவம் - எம்.எஸ். தம்பதியின் நண்பர்கள், உறவினர்கள், இசை அன்பர்களுக்குப் பெரும் ஆச்சர்யமும் பரபரப்பும் ஏற்பட்டது.

அந்த அற்புதம் செப்டம்பர் 16ம் தேதி எம்.எஸ். அவர்களின் பிறந்த தினத்தன்று நிகழவே செய்தது. அந்த நிகழ்ச்சி மூன்று விஷயங்களில் முக்கியத்துவம் வாய்ந்ததாயிற்று. முதலாவது ராதா விகவ நாதனின் சோர்வு அறியாத மனோ திடத்தையும் சாதனை உணர்வையும் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தது. ''எம்.எஸ். அவர்கள் தமது இசையை இறைவனுக்கு அர்ப்பணித்தார் என்றால், ராதா

* ராதா

* ஐஸ்வர்யா

விசுவநாதன் தமது இசையை எம்.எஸ்.ஸுக்கே அர்ப்பணித்து வந்தார்'' என்று அன்று தலைமை தாங்கிய அசோக் லேலண்ட் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் திரு சேஷசாயி குறிப்பிட்டதை அவையோர் கரவொலி செய்து வரவேற்றனர்.

இரண்டாவது சிறப்பு, அந்த நிகழ்ச்சி ராதா விசுவநாதனின் பேத்தி ஐஸ்வர்யாவின் குரலிசை அரங்கேற்றமாகவும் அமைந்ததுதான். ராதாவுக்குப் பக்கபலமாக ஐஸ்வர்யா உடன் பாடியபோது பல இடங்களில் நம்மையுமறியாமல் ''பலே! பேஷ்!'' என்று பாராட்டத் தோன்றியது. அது, ஐஸ்வர்யாவின் மரபு அணுக்கள் இசையால் வடிவமைக்கப்பட்டவை என்பதை நிரூபித்தது. வாழ்க்கை வேறு, இசை வேறு என்றில்லாமல் இசையையே வாழ்க்கையாக ஏற்று, உழைத்துப் பாடுபட்டால் ஐஸ்வர்யா, கொள்ளுப் பாட்டி எம்.எஸ்.ஸின் பரிபூரண ஆசிகளைப் பெற்று உன்னத நிலைகளுக்கு உயர முடியும்.



* இளவயதில் எம்.எஸ். உடன் ராதா...

அன்றைய கச்சேரிக்குப் பக்க வாத்தியம் வாசித்த கலைஞர்கள் ஸ்ரீராம்குமார் (வயலின்) கார்த்திக் (கடம்), எஸ்.சிவகுமார் (மிருதங்கம்), அநிருத் ஆத்ரேயா (கஞ்சிரா) ஆகியோர், கச்சேரி ஒரு நிமிஷம்கூட தொய்வு காணாத வகையில் களைகட்டச் செய்தார்கள்.

மூன்றாவது முக்கிய சிறப்பு, ராதா விசுவநாதனின் மகன் வி.சீனிவாசன் நிறுவியுள்ள சுஸ்வரலக்ஷ்மி ஃபவுண்டேஷன் என்ற அறக்கட்டளையின் தொடக்க விழாவாகவும் அன்றைய நிகழ்ச்சி அமைந்ததுதான். எம்.எஸ். அவர்கள் பாடக் கேட்ட பிரபல ஹிந்துஸ்தானி இசைக் கலைஞர் படே குலாம் அலிகான், ''நீங்கள் சுபலக்ஷ்மி மட்டுமல்ல; சுஸ்வர லக்ஷ்மியும்கூட'' என்று பாராட்டி வாழ்த்தினார். அந்த வாழ்த்தையே தனது பெயராக்கிக்கொண்ட சுஸ்வரலக்ஷ்மி அறக்கட்டளைக்கு உயர்வான நோக்கங்கள் உண்டு என்பதை நாரதகான சபைத் தலைவர் கிருஷ்ணசுவாமி விளக்கிக் கூறினார் : சிறப்புப் பயிற்சி தேவைப்படுகிற - பிறவியிலேயே குறைபாடுகளை உடைய- குழந்தைகளுக்கு சாஸ்த்திரிய இசையைக் கொண்டு சென்று, அதன் மூலம் அவர்களுடைய அறிவு வளர்ச்சிக்கும் உள்ளத்தின் அமைதிக்கும் உதவ முற்படுவது ஒரு புறம்; அத்தகைய குழந்தைகளிடம் உள்ள இயற்கையான கலை உணர்வுகளை ஊக்குவித்து, அவர்கள் அவற்றை வெளிப்படுத்த வசதி செய்து தருவது மற்றொருபுறம். சுஸ்வரலக்ஷ்மி ஃபவுண்டேஷன் தனது லட்சியங்களை நோக்கி முன்னேறவும் அதற்கு மேலும் சாதனைகள் புரியவும் நமது வாழ்த்துக்கள். (விவரங்களுக்கு ஃபோன் : 080-26967629)

''எம்.எஸ். அவர்களுடைய உலகளாவிய பாட்டும், தேசிய ஒருமைப்பாடு நோக்கமும், ஈகைக் குணமும், சோர்வு காணாத உழைப்பும் எளிமையும் அவருக்கு 'பாரத ரத்னா' பட்டத்தைப் பெற்றுத் தந்திருக்கலாம். ஆனால் என்னைப்போல அவர் காட்டிய அன்பிலே குழைந்த நூற்றுக்கணக்கானோருக்கு அவர் என்றும் எம்.எஸ். அம்மாதான்'' என்று கிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளி குறிப்பிட்டதை அவையில் கூடியிருந்த அனைவரும் ஆமோதித்து மகிழ்ந்தனர்.

அன்றைய நிகழ்ச்சிக்கு இறை வணக்கமாக 'நாதவிந்து கலாதி நமோ நமோ' என்று திருப்புகழ் பாடினார் மகேஷ் விநாயகராம். அவையில் கூடியிருந்த ஏராளமான எம்.எஸ். அன்பர்கள் நாத பிரும்மத்தின் வயப்பட்டு, மன நெகிழ்ச்சியா, மன நிறைவா என்று புரியாத ஒரு புதிய ஆனந்த உணர்வுடன் இல்லம் திரும்பினர்.

- கி.ரா.

# சி.ஐ.டி. விஷ்வா துப்பறியும்

# இறந்தவனைத் தேடு 9

கதை: பருதலம் சுகுமாரன் படம்: ஜெயராஜ்
















நீங்க கேட்டுக்கிட்டது போல, இந்த ஏரியாவுல சந்தேகப்படறாப்பல யாரும் இல்லை.


இண்டு இடுக்கு விடாம அலசிட்டோம். கடைசியா...


...ஒருத்தன் மாட்டியிருக்கான். பாக்கறீங்களா?


உலகே மாயம்... வாழ்வே மாயம்...
ஊஹூம்... இவன் இல்லை.


ஏதாவது தகவல் கிடைச்சா சொல்லி அனுப்பறோம்.
இந்த எஸ்.ஐ. கண்ணாயிரம் கண்ல படாம ஒரு ஈ, காக்காகூட இருக்க முடியாது...
இனி, நாமே முயற்சிக்க வேண்டியதுதான்.


விஷ்வா, தன் உருவத்தை மாற்றுகிறார். தலை முடியை மேலே தூக்கிச் சீவிக்கலாம்.
இந்தத் தாடி ஆளையே மாற்றிடும். ஏரியாவைச் சுத்தி...
...சுத்தி வரணும். யாரும் சந்தேகப்படக்...
கூடாது. ஏதாவது ஒரு வியாபாரி ரூபத்துல போகணும்.


கத்திரிக்கா, முருங்கைக்கா, காலிஃப்ளவர்...
இந்த வேஷம் நல்லாருக்கும் போலிருக்கே...


இந்தா பணம். நாலு நாளைக்கு இந்தப் பக்கம் வராதே...
வண்டி தள்றது சுலபம் இல்ல. நீ ஒரு பக்கம் தள்ளினா...
...அது ஒரு பக்கம் போகும். எடை விஷயத்துல...
...ஜாக்கிரதை. கொசுறு கேட்டால் கொடுக்கணும்.
காய் காய்... கத்திரிக்காய்...


TO LET
வீடு எவ்வளவு...
...நாளா பூட்டியிருக்கு. விசாரிக் கணும்...


TO LET
இந்த ஆளை எங்கோ பார்த்தது போல இருக்கே...
இந்த வீட்ல ஏதோ மர்மம் இருக்கறதா உள் மனசு சொல் லுதே...


இரண்டாம் நாள்...
TO LET
ஏன் யாரும் குடி வரலே...?


மூன்றாம் நாள்... நோட்டமிட்டு, பிறகு வீட்டை ஆராய்கிறார்.
TO LET
வீணாகச் சந்தேகிக்கிறோமோ... சட்டென்று ஒரு யோசனை வர - விஷ்வா திரும்பிப் போய்...




திருவள்ளூர் மாவட்டம் திருநின்ற ஊரில் குணசேகரன் குடும்பம் வசித்து வந்தது. டீக்கடை நடத்திப் பிழைத்த அவருக்கு மூன்று குழந்தைகள். எப்படியாவது சொந்தமாக ஒரு சிறிய வீட்டைக் கட்டிவிட வேண்டும் என்று அவருக்கு ஆசை. கையில் கொஞ்சம் பணம் சேர்ந்தவுடன் தம் கனவை நனவாக்குவதில் இறங்கிவிட்டார். அவருடைய சொந்த வீடு கட்டி முடிக்கப்பட்டபோது, அவர் தலையின் மீது இரு பதாயிரம் ரூபாய் கடன். ஆனால், சொந்த வீட்டில் வாழ அவருக்குக் கொடுத்து வைக்கவில்லை. ஹார்ட் அட்டாக்கில் திடீரென்று குணசேகரன் இறந்துபோக, அவரது குடும்பம் ஆடிப்போனது.

குணசேகரனின் மனைவி வசந்தா, குழந்தைகளை வளர்க்க திருநின்றவூர் இரயில்வே ஸ்டேஷனில் வேர்க்கடலை வியாபாரம் செய்ய ஆரம்பித்தார். மூத்த மகள் ஒரு எக்ஸ்போர்ட் கம்பெனிக்கு வேலைக்குப் போக, மெக்கானிக்காக இருந்த உறவுக்காரரின் கடையில் மூத்த மகன் வேலைக்குச் சேர்ந்தான். கடைசி பையன் இளையராஜாவுக்குத் தொடர்ந்து படிக்க வேண்டும் என்று ஆசை. திருநின்றவூரிலிருந்து ஆறு கி.மீ. தொலைவில் உள்ள கசுவா கிராமத்தில் இலவசப் பள்ளிக்கூடம், ஆதரவற்றோர் இல்லம், முதியோர் இல்லம் ஆகியவற்றை நடத்தி வரும் சேவாலயா தொண்டு நிறுவனத்தின் முரளீதரனிடம் இளையராஜாவை ஒப்படைத்து, "இவன் இனி உங்கள் பிள்ளை. இவனைப் படிக்க வைத்து ஆளாக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. எனக்கு வேறு வழி தெரியவில்லை" என்று கண் கலங்கினார் வசந்தா. அப்போது இளையராஜாவுக்கு வயது பதினொன்று. குடும்பத்தினரை விட்டுப் பிரிந்து, ஆதரவற்றோர் இல்லத்துக்கு வந்த இளையராஜாவின் கண்களில் எப்போதும் அம்மாவை விட்டுப் பிரிந்த சோகம் குடி கொண்டிருக்கும்.

"சாப்பிடப் பிடிக்காது; தூக்கம் வராது; வகுப்பில் ஆசிரியர் சொல்லிக் கொடுக்கும் பாடம் மண்டையில் ஏறாது; உலகத்தில் உள்ள எல்லோருமே என்னை வெறுப்பது போல இருக்கும். என்னைத் தனியாகத் தவிக்கவிட்டு விட்டதற்காக அம்மா மீது கோபமாக வரும். சில சமயங்களில், அனாதை இல்லத்தை விட்டு அம்மாவிடமே ஓடிப்போய் விடலாமா என்று தோன்றும்" என்று பழைய நாட்களை நினைவு கூர்கிறார் இளையராஜா.

"சேவாலயாவின் ஆதரவற்றோர் இல்லத்தில் சக மாணவர்களுடன் சேர்ந்து ஆசிரம வேலைகளையும் கவனித்துக் கொண்டு, பள்ளியிலும் நன்றாகப் படித்தேன். பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி என்று எல்லாவற்றிலும் கலந்துகொள்வேன். என் ஆசிரியர்கள் அனைவரும் எனக்கு உற்சாக மூட்டி, எல்லா உதவிகளையும் செய்தார்கள். 'புரட்சியாளர்கள் புதைக்கப்

படுவதில்லை; விதைக்கப்படுகிறார்கள்' - இது, நான் ஒரு பேச்சுப் போட்டியில் பேசிய வரி. இந்த வரியை நான் பேசிய போது எழுந்த கைதட்டல் ஒலியும், என் பேச்சுக்குக் கிடைத்த பரிசும் இன்னமும் என் கண் முன்னே நிற்கிறது. பத்தாம் வகுப்புப் படித்தபோது, எனக்குப் பாடம் எடுத்த ஆசிரியர்கள் அனைவரும், எந்த நேரத்திலும், எந்தச் சந்தேகமானாலும் சொல்லித் தந்தார்கள். பத்தாம் வகுப்பில்

# தன்னம்பிக்கை ராஜா!

நல்ல மார்க் எடுத்து பாஸ் பண்ணின போது, முரளீதரன் அண்ணன் என்னைத் தொடர்ந்து கல்லூரியில் சேர்ந்து படிக்கச் சொன்னார். ஆனால், என்னுடைய குடும்பச் சூழ்நிலை கருதி, எவ்வளவு சீக்கிரம் வேலைக்குப் போகிறோமோ அவ்வளவு நல்லது என நான் நினைத்தேன். ஆவடியில் ஒரு பாலிடெக்னிக்கில் கம்ப்யூட்டர் டிப்ளமா சேர்ந்தேன். நான் திருநின்றவூரிலிருந்து தினமும் ஆவடியில் இருந்த பாலிடெக்னிக்குக்குச் சென்றுவர சௌகரியமாக ஒருவர் எனக்கு சைக்கிள் வாங்கிக் கொடுத்தார். மூன்று வருட படிப்பை வெற்றிகரமாக முடித்துவிட்டு, ஒரு கம்ப்யூட்டர் நிறுவனத்தில் 2500 ரூபாய்க்கு வேலைக்குச் சேர்ந்தேன். வேலை பார்த்த படியே, தபால் மூலம் பி.சி.ஏ. படிப்பை முடித்தேன். 2007 ஏப்ரல் மாதம் எனக்கு டாடா கன்சல்டன்சி சர்வீசஸ் நிறுவனத்திலேயே வேலை கிடைத்தது'' என்று பெருமையுடன் சொல்கிறார் இளையராஜா.

இப்போது, வார விடுமுறை நாட்களில் சேவாலயாவுக்குத் தவறாமல் வந்து பலவிதமான வேலைகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்கிற இளைய ராஜா, ''இங்கே தங்கிப் படித்த என்னுடைய இன்றைய நிலைமை, இப்போது சேவாலயாவில் தங்கிப் படிக்கும் பல மாணவர்களுக்கும் இன்ஸ்பிரேஷனாக இருக்கிறது. இங்கே வருகிற பார்வையாளர்கள் அனைவரும் என் கதையைக் கேட்டு ஆச்சரியப்படுகிறார்கள்'' என்கிறார்.

''இன்று மாதம் பதினைந்தாயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறார் இளைய ராஜா. சேவாலயாவின் ஆதரவற்றவர்கள் இல்லத்தில் தங்கிப் படித்த மாணவர் ஒருவர், தன்னம்பிக்கையோடு வாழ்க்கையில் பல சவால்களையும் எதிர்கொண்டு முன்னேறி, என்னுடன் கூட டி.சி.எஸ். நிறுவனத்திலேயே பணிபுரிகிறார் என்பதைப் பார்க்கிறபோது எனக்கு மிகவும் பெருமையாக இருக்கிறது'' என்று நெகிழ்ச்சியுடன் கூறுகிறார் டி.சி.எஸ். நிறுவனத்தில் முக்கிய பொறுப்பில் இருக்கும் 'சேவாலயா' முரளீதரன். இன்னொரு விஷயம் தெரியுமா? இன்று சேவாலயா அறக்கட்டளையின் அறங்காவலர்களில் ஒருவராகவும் இருக்கிறார் இளையராஜா.

– எஸ்.சந்திரமௌலி





● அம்மாவுடன் இளையராஜா

# ஜாலி ஸ்டோர்ஸ்

'ராமர் இல்லை' என்று சொல்லிய அந்தத் தொல்லியல் ஆராய்ச்சி நிலையம் சும்மா இல்லாமல் 'கண்ணகியும் ஒரு கற்பனை' என்று ஆராய்ந்து அறிக்கைவிட, அகில உலகப் பகுத்தறிவுக் கழகத் தலைவர் 'அறிவுக் கொழுந்து' சற்று ஆடித்தான் போய்விட்டார்.

அறிக்கைவிட்ட தொல்லியல்காரர் களுக்கு எதிராக 'எச' அறிக்கையைவிட அவர் நாக்கு துடித்தாலும், சென்ற நான்கு நாட்களாக அந்த ஆராய்ச்சி நிலையத்தை 'ராமர் இல்லை' என்று சொன்னதற்காக ஆகா, ஒகோ என்று புகழ்ந்துவிட்டிருந்த தால் நாக்கைக் கடித்துக்கொண்டு பேசா மலிருக்கும்படியானது.

இருந்தாலும் கண்ணகி மெய்யாலுமே வாழ்ந்த கற்புக்கரசி என்பதற்கான ஆதாரங் களை அவர் தேட ஆரம்பித்தாயிற்று. காலையில் வாக்கிங் போவதை அன்று தவிர்த்தார். போகும் வழியில் கண்ணகி சிலை கோபமாகக் கையிலுள்ள சிலம்பை அவர்மேல் தூக்கி எறிந்து, 'என்னை கற்பனை என்றவனை நீ என்ன செய்தாய்?' என்று கோபப்படும் ஆபத்து உண்டென்று அவர் பயந்திருக்கலாம். அதைவிட அந்த நேரத்தில் வீட்டிலிருந்தபடி ஆதாரங்களைத் தேடலாமென்றும் நினைத்திருக்கலாம்.



முதலில் தம் வீட்டிலிருந்த சிலப் பதிகார புத்தகங்களை எல்லாம் எடுத்து வைத்தார். அதில் ஒரு சிலப்பதிகார புத் தகம் இவர் கைப்பட எழுதியதாகத் தென் பட்டது. எப்போதோ தம் கல்லூரி நாட் களில் நாடகத்துக்காக கண்ணகி கதையை இவர் எழுதியிருந்த ஒரிஜினல் நகல் அது.

''இது அசல் இளங்கோவடிகளே தம் கைப்பட எழுதி, தமிழ்க் காவலரான என்னிடம் கொடுத்தார்'' என்று தொல்லியல்காரர் களிடம் காட்ட லாமென்று ஒருகணம் எண்ணினார்.

அப்படியே தம்




# கண்டேன் கண்ணகியை!

சாதுர்ய, சாமர்த்திய பேச்சால் இதை ஒப்புக்கொள்ள வைத்தாலும், இளங்கோ வடிகள் இருந்தார் என்பதற்கான ஆதாரமாக இது அமையுமேயன்றி, கதாபாத்திரமான கோவலன், கண்ணகி இருந்ததற்கு என்ன ஆதாரமென்ற கேள்வி எழுமென்று விட்டு விட்டார்!

இஷ்ட தெய்வங்களை வேண்டிக் கொண்டு அவர் தேடியது வீண் போக வில்லை. அவர் சேகரித்து வைத்திருந்த பல சிலப்பதிகார புத்தகங்களின் நடுவில் அந்த போட்டோ வந்து விழுந்தது.

''கண்டேன் கண்ணகியை'' என்று ஆவல் மிகுதியால் உற்சாகமாகக் கத்தியபடி அந்த கண்ணகி போட்டோவை எடுத்து வைத்து தொல்லியல்காரர்களுக்குக் கடிதம் எழுதினார்.

'இத்துடன் கண்ணகியின் புகைப்படம் அனுப்பியுள்ளேன். இவர்தான் கண்ணகி என்பதற்கு கையில் சிலம்பு இருப்பதைக் காணலாம். உடனே மாற்று அறிக்கையை வெளியிடவும்.'

ஏற்கெனவே ஏண்டா இப்படி ஓர் அறிக்கை விட்டோமென்று பீதியிலிருந்த தொல்லியல்காரர்கள், தலைவர் கொடுத்த ஆதாரத்தை ஏற்று 'கண்ணகி கட்டாயம் வாழ்ந்து போட்டோவுக்கும் போஸ் கொடுத்துள்ளார்' என்று மன்னிப்பு அறிக்கைவிட்டு தப்பித்துக் கொண்டனர்.

காப்பாற்றிவிட்ட நடிகை கண்ணம்பாவின் போட்டோவுக்கு 'என்ன ஓர் ஆதாரமென்று' தம்மை மெச்சியபடி தலைவர் நன்றி சொன்னார். கூடவே என்.டி.ராமராவ் போட்டோவை இதுபோல யாராவது அனுப்பித் தொலைத்து 'ராமர் இருந்தார்' என்று சொல்லச் சொல்லிவிடுவார்களோ என்ற பயமும் அவருக்கு இல்லாமலில்லை!

கற்பனை: **எஸ்.கார்த்திகேயன்**

**க**டந்த நாற்பத்தேழு வருடங்களாக டப்பிங் ஆர்ட்டிஸ்ட்டாக இருப்பவர் தேவி. ஐந்து வயதில் குழந்தைகளுக்காகப் பின்னணி பேச ஆரம்பித்தவர், பல ஹீரோயின்கள், கேரக்டர் ரோல் என்று குரல் கொடுத்து வளர்ந்து, இன்று சீனியர் டப்பிங் ஆர்ட்டிஸ்ட்.

''முன்னெல்லாம் தமிழ் உச்சரிப்பு சரியா இல்லேன்னா ஹீரோயினாவே ஆக முடியாது. ஆனா இன்னைக்கு நிலைமை மாறிப் போச்சு. டப்பிங் ஆளுங்க புண்ணியத்துலதான் இப்போ பலரோட பிழைப்பு ஓடுது. அறுபது எழுபதுகள்ல செட்டுக்குள்ள மைக் கட்டி தொங்க விட்டிருப்பாங்க. அதுக்கு நேரா வந்து நின்னுதான் நடிச்சிட்டுப் பேசணும். அவுட்டோர் போனா நாகரா பெட்டியில ரிக்கார்ட் பண்ணுவாங்க. ரொம்பக் கஷ்டம். ஏவி.எம். செட்டியார்தான் முதன்முதலா தமிழுக்கு டப்பிங் கலையைக் கொண்டு வந்தவர். அதனாலதான் அவரோட நினைவு தினம், பிறந்த தினத்துக்கு டப்பிங் கலைஞர்கள் சார்பா வருஷம் தவறாம அஞ்சலி செலுத்திட்டு வர்றோம்'' என்ற தேவி, தம் துறையின் தெளிவு களிவுகளை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்.

''தொழில்நுட்பம்தான் எளிமையாயிடுச்சே தவிர, டப்பிங் வேலைன்றது நடிக்கறதைவிட கஷ்

**“ தொழில் நுட்பம்தான் எளிமை ஆயிடுச்சே தவிர, டப்பிங் வேலைன்றது நடிக்கறதைவிட கஷ்டமானது! ”**






டமானது. காட்சிக்குத் தகுந்தா மாதிரி, மாடு லேஷனுக்கு ஏத்த மாதிரி குரல் கொடுக்கணும். நடிச்சவங்களே தங்களுக்குக் குரல் கொடுக்கறது ரொம்ப ஈஸி. ஆனா இன்னொருத்தர் குரலுக்குப் பேசும்போது ரொம்ப கவனம் இருக்கணும். கொஞ்சம் பிசகினாலும் எதிர்பார்த்த ரிசல்ட் கிடைக்காது.

டப்பிங் ஆர்ட்டிஸ்ட் யூனியன்ல இருபத்தஞ்சாயிரம் ரூபா கட்டி மெம்பர்ஷிப் கார்டு எடுத்தாத்தான் யாருக்கும் நீங்க டப்பிங் பேச முடியும். யூனியன்ல இன்சார்ஜ்னு ஒரு பத்துப் பேர் இருப்பாங்க. அங்க இங்கன்னு அலைஞ்சு இவங்கதான் டப்பிங் வாய்ப்பு வாங்கித் தர்றவங்க. இந்த இன்சார்ஜ் கார்டு எடுக்கக் கூடுதலா பத்தாயிரம் கட்டணும். என்ன படம் ரெடியாயிட்டிருக்கு, எத்தன பேர் டப்பிங்குக்கு வேணும், எந்த கேரக்டருக்கு யார் யார் பொருத்தமா இருப்பாங்கன்னு எல்லாம் இன்சார்ஜ் ஆட்கள் தெரிஞ்சுக்குவாங்க. யூனியன்ல வந்து தேவையானவங்கள அனுப்பி வைப்பாங்க. இதுக்குத் தனியா கமிஷனும் எடுத்துப்பாங்க. சம்பளம் கால்ஷீட்படியும் தருவாங்க... இல்ல, மொத்தமாவும் பேசிக்குவாங்க. சமயத்துல தினப்படி தர்றதுகூட உண்டு. படம் முடிஞ்சு ரிலீஸாகறதுக்குள்ள சம்பளம் கைக்கு வந்துடும். ஏமாத்த முடியாது. ஒருவேளை அப்படி நடந்துக்கிட்டாலும் யூனியன் சும்மா விடாது.

சில நடிகைகளுக்கு, குறிப்பா ஹீரோயின்களுக்குச் சில டப்பிங் ஆர்ட்டிஸ்ட்களோட குரல் செட்டாயிடும். அந்த மாதிரி நேரத்துல சம்பந்தப்பட்ட ஹீரோயினே விரும்பித் தனக்குக் குரல் கொடுக்க அந்த ஆர்ட்டிஸ்ட்டை கூப்பிடுவாங்க. இன்னைக்கு முன்னணி ஹீரோயின்களுக்கு பேசறவங்கள்லாம் இப்படித்தான் பேசுறாங்க. குறிப்பிட்ட ஹீரோயின் நடிக்குற படத்தோட டைரக்டரும் தயாரிப்பாளரும் ஓ.கே. சொல்லிடறதால எல்லாமே ஸ்மூத்தா போகுது. ஆனா ஒண்ணு, யூனியன் கார்டு இருந்தாத்தான் எல்லாம் சாத்தியம்.

டப்பிங் ஆர்ட்டிஸ்ட்களுக்கு போஸ்ட் புரொடக்ஷன் டைம்லதான் வேலை. ரிக்கார்டிங் தியேட்டர்ல படத்தைப் போட்டுக் காட்டி அதுக்கேற்ப பேசச் சொல்வாங்க.

# மாண்புமிகு மனிதர்கள்!

டைரக்டர், உதவி டைரக்டர் எல்லாரும் இருந்து சொல்லிக் கொடுப்பாங்க. முதல் டேக்லயே ஓ.கே. ஆகறதும் உண்டு. ரெண்டு மூணு முறை இழுத்துட்டுப் போறதும் உண்டு. ஆனா பொதுவா இதுக்கு இவங்க நல்லா பேசுவாங்கன்னு முடிவு பண்ணிப் பேச விடறதால அதிகமா தப்பா பேச வாய்ப்பு இருக்காது.



எங்கள்ல பல பேருக்கு நடிக்கற ஆர்வமும் இருக்கும். குரலாவது வந்ததேன்னு சந்தோஷப்பட்டுக்க வேண்டியதுதான்!

ஒருமுறை டைரக்டர் சங்கர், சிவாஜி சாரை வச்சு ராஜரிஷின்னு படம் எடுத்தார். சிவாஜி சாருக்கு ரிஷி பத்தினியா நான் நடிச்சேன். எனக்குக் குரல் கொடுத்தது மட்டுமில்லாம, படத்துல வர்ற ஒரு மாமியார் கேரக்டருக்கும் குரல் கொடுக்கணும். நல்லபடியா முடிச்சுக் கொடுத்தேன். இன்னொரு மருமகள் கேரக்டருக்கு வேறொருத்தங்க டப்பிங் பேச, அது சரியா அமையல. உடனே சங்கர் சார் காச்மூச்னு கத்திட்டு, 'போய் தேவிய வரச் சொல்லுங்க'ன்னு சொல்லி மருமகளுக்கும் என்னையே பேசச் சொன்னாரு. 'ஏற்கெனவே ரெண்டு கேரக்டருக்குப் பேசியிருக்கேன் சார்'னு நான் சொல்ல, 'உன்னால மூணு வெவ்வேறு குரல்ல பேச முடியுமா, முடியாதா'ன்னு கட் அண்ட் ரைட்டா கேட்டார். 'முடியும்'னு சொல்லி மருமகளுக்குப் பேசி முடிக்கவும் டைரக்டர் உடனே 'சபாஷ்'னு சொல்ல, அதுவும் டயலாக்கோட டயலாக்கா பதிவாயிடுச்சு. உடனே சவுண்ட் இன்ஜினியர் 'அடடா, என்ன சார் இப்படிப் பண்ணிட்டீங்க! கொஞ்சம் தள்ளிப் பாராட்டியிருக்கலாமே'ன்னு சொல்ல, திரும்ப மறுபடி பேசி ரிக்கார்ட் பண்ணாங்க. இது மாதிரி சுவாரஸ்யமான, சுவையான பல அனுபவங்கள் எங்க ஃபீல்டுல தினமும் நடக்கும். டப்பிங் பேசறவங்களுக்குள்ள நல்ல நட்பு இருக்கும். உயிருக்குயிரா பழகுவோம். போட்டி, பொறாமை நிச்சயமா இருக்காது. வாய்ப்பு வராதவங்களுக்கு சமயத்துல தனக்கு வர்ற வேலையை விட்டுக் கொடுக்கறதும் நடக்கும். ஒருத்தருக்கொருத்தர் உண்மையா இருப்போம். அடுத்தவங்களை பத்தி தப்பா பேசறது, தப்பான விஷயங்கள்னு எதையும் டப்பிங் ஃபீல்டு பார்க்க முடியாது. அபூர்வமா எப்பவாச்சும் திட்டு வாங்குவோம். அதுகூட வேலைல தப்பு நடந்தாத்தான். மத்தபடி ரொம்ப மரியாதையாத்தான் நடத்துவாங்க. உண்மையில நாங்க மாண்புமிகு மனிதர்கள்தான்!

குரல்தான் எங்க மூலதனம். அது இல்லன்னா எங்க பிழைப்புல மண்ணுதான். பொத்திப் பொத்திப் பாதுகாப்போம். மழைல நனைய மாட்டோம். ஜலதோஷம் பிடிக்காம பாத்துப்போம். ஐஸ்கிரீமுக்கு எப்பவுமே தடாதான். கத்திப் பேசறதைத் தவிர்ப்போம். மத்தபடி டயட்லாம் எப்பவும் போலத்தான். பிரபலமான நடிகைகளுக்கு நம்ம குரல் செட் ஆயிட்டா, நம்ம காட்டுல மழைதான். இப்ப டப்பிங் படங்கள் நிறைய வருது. போதாக்குறைக்கு சீரியல்கள் வேற. குறைவில்லாம வேலைங்க இருக்கு. நம்மையும் நம்ம குரலையும் தெளிவா வச்சுக்கணும். முன்னணிக் கலைஞர்கள் சிறப்பா நடிக்கறதுக்கு எங்க குரலும் ஒரு முக்கிய காரணம்னு நினைக்கும்போது சந்தோஷமா இருக்கும். எங்கள்ல பல பேருக்கு நடிக்கற ஆர்வமும் இருக்கும். குரலாவது வந்ததேன்னு சந்தோஷப்பட்டுக்க வேண்டியதுதான். என் பையன், பொண்ணு ரெண்டு பேருமே டப்பிங் ஆர்ட்டிஸ்ட்தான். நல்லா படிச்சிருக்காங்க. இருந்தாலும் என்னைப் பார்த்து என் துறை பிடிக்கப் போனதால அவங்களா விரும்பி டப்பிங் பேச ஆரம்பிச்சுட்டாங்க. இதுதானே ஒரு ஃபீல்டோட வெற்றி!''

சந்திப்பு : மு.மாறன்
படங்கள் : பொள்ளாச்சி சுந்தரம்

# கடன் வாங்கினால் கட்டத் தேவையில்லை!



ஓய்வுபெறும் நாளில் பூச்செண்டு, பொன்னாடையோடு ஒரு காசோலையையும் கோபால கிருஷ்ணனுக்கு அளித்தது நிர்வாகம். பிராவிடெண்ட் ஃபண்ட் தொகை!

அவர் அந்தத் தொகையை எந்தவிதத்திலும் சேமிக்கவில்லை. உறவினர்களுக்கெல்லாம் வாரி வழங்கினார். மகளின் திருமணத்தின்போது தம் சக்திக்கு மீறிச் செயல்பட்டார். எல்லாம் மகன் இருக்கும் தைரியம்!

ஆனால், ஏதோ ஒரு விஷயத்தில் அப்பாவுக்கும் பிள்ளைக்கும் கருத்து வேறுபாடு வர, அவன் தனியாகச் சென்றுவிட்டான். மாதாமாதம் பெற்றோருக்கு எந்தப் பணமும் அனுப்புவதில்லை. தினசரி வாழ்க்கைக்கே கஷ்டப்படத் தொடங்கினார் கோபால கிருஷ்ணன். தங்கியிருக்கும் வீட்டை விற்கவும் மனமில்லை (எங்கே தங்குவதாம்?). அதே சமயம் வீட்டை அடமானம் வைத்து வங்கியிடமிருந்து கடன் வாங்கலாமென்றால், அதைத் திருப்பிச் செலுத்த எந்த வழியும் இல்லையே என்ற தயக்கம். இந்த நிலையில்தான் 'எதிர் அடமானம்' (Reverse mortgage) என்ற முறை வங்கிகளில் அறிமுகமாகியிருப்பதை அறிந்தார்.

இதைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமானால் ஒருவருக்கு அறுபது வயது நிறைந்திருக்க வேண்டும். அவர் பெயரில் ஒரு வீடோ, ஃப்ளாட்டோ இருக்க வேண்டும். அந்தச் சொத்தை வங்கியில் அடமானம் வைத்துவிட்டுக் கடன் பெறலாம். ஒரே முறையிலும் பெறலாம்; தவணைகளிலும் வாங்கிக்கொள்ளலாம். தம் ஆயுள் முழுவதும் இந்தக் கடனை அவர் திருப்பிச் செலுத்தத் தேவையே இல்லை (அவராகவே செலுத்தினாலும் ஓகே தான்).

'வங்கிகள் என்ன இளிச்சவாயர்களா?' என்று கேட்கக்கூடாது. சொத்தைத்தான் அடமானம் வாங்கி விட்டார்களே. கடனாளி இறந்தவுடன் அவர் செலுத்த வேண்டிய தொகையை, உரிய வட்டியுடன் செலுத்தி விட்டு அந்தச் சொத்தை இறந்தவர்களின் சட்டபூர்வ வாரிசுகள் மீட்டுக்கொள்ளலாம். அப்படிச் செலுத்தாவிட்டால் சொத்தை வங்கியே விற்றுவிட்டுத் தனக்குரிய பாக்கியை எடுத்துக்கொள்ளும்.

ஆனால், இந்த வசதியைப் பெற இன்னும் சில நிபந்தனைகளும் உண்டு. அடமானம் வைக்கப்படும் வீடு அல்லது ஃப்ளாட்டில் கடன் வாங்கும் அதன் சொந்தக்காரர் தொடர்ந்து வசிக்க வேண்டும். தவிர, வியாபாரம் தொடங்குவது மாதிரியான காரணங்களுக்காக இந்த எதிர் அடமானக் கடன் வழங்கப்படாது.

- ஜி.எஸ்.எஸ்.





# மருதமலை

ஆக்ஷனை பெருசா நம்பி களமிறங்கி யிருக்கு ஆஸ்கார் டீம். ஏழுமலை தந்த தெம்புல மருதமலையா பொங்கி எழுந்தி ருக்கார் அர்ஜுன். ரிசர்வ் தொகுதியில் தேர்தல் நடத்தவிடாமல் படுத்தற வில்ல னைப் பொளந்து கட்ற கதை. கொஞ்சம் பாசம், கொஞ்சம் நேசம், கொஞ்சம் காமெடி, நிறைய ஆக்ஷன்னு பின்னிப் பெடலெடுத்திருக்கார் டைரக்டர் சுராஜ்.

ஏட்டா இருக்கும்போது வடிவேலுவுக் குப் பயந்த மாதிரி அர்ஜுன் பண்ற அடாவடிகள் அலம்பல் ரகம். நிலாவோடு காதல் பண்ணும்போது ரசிக்க வைக்கறார். சண்டைங்க ஒவ்வொண்ணும் ச்சும்மா பிச்சி உதர்ற ரகம்... புகுந்து விளையாடி இருக்கார். நிலாவுக்குக் காதல்தான் டார் கெட். மீதி வேலை எதுவும் இல்ல. நடிக்கக்கூட செய்யல. காதலுக்குக் கொடி நாட்றார், அவ்வளவுதான். வடிவேலுதான் படத்துக்கு மிகப்பெரிய ப்ளஸ். அவர் ஸ்க்ரீன்ல வந்தாலே 'சிவாஜி' ரஜினிய பார்த்தா மாதிரி விசில் பறக்குது. அதுக் கேத்த மாதிரி அவரும் தன்னோட சேஷ் டைகளால நம்ம மனசை களவாண்டுடு றார். குறிப்பா அர்ஜுன்கிட்ட வலியப் போய் வம்புல மாட்டிக்கிறது, குற்ற வாலியத் தப்பிக்கவிட்டு புலம்பறது, பிச்சைக் காரன்கிட்ட மாமூல் வாங் கறதுன்னு பிரிச்சு மேய றார். தேர்தல் அதிகாரி ரகுவரன் விறைப்பின் விளைநிலம். சல்யூட் அடிக் கத் தோணுது. பாசக்கார அப்பாவா நாசர். பார்ட்டிக்கு சொல்லித்தரணுமா என்ன? நெகிழ வைக்கிறார். வில் லனா வர்ற லால் அண்ட் கோ நடத்தற அராஜ கங்க பல தமிழ் சினிமாக்கள்ல ஏற்கெனவே பார்க்கப்பட்டவைதான். ஆனாலும் லால், கோல் அடிக்கிறார்.

இமான் இசை சொல்லிக்கற மாதிரி இல்ல. பின்னணி, ஆக்ஷன் காட்சிகள்ல முன்னணி. செந்தில்குமாரோட ஒளிப் பதிவுக்கு சுறுசுறுப்பு ஜாஸ்தி.

இன்ஸ்பெக்டரா வந்து அர்ஜுன் எடுக் குற நடவடிக்கைகள் அரதப் பழசு. வில் லனை ரவுடிகள் ஜெயிலுக்குக் கூட்டமா வந்து பாக்கறதும், நேர்மையான போலீ ஸான அர்ஜுன்கிட்ட லால் செல்போன்ல தொடர்ந்து பேசறதும், நகைக் கடை மாதிரி ஜெயிலுக்குள் உலா வர்றதும் சீரியஸ் சினிமாவின் சிரிப்புக் காட்சி கள்.

மேம்பால ஊழல், பாக்கெட் சாராயம், ரிசர்வ் தொகுதி தேர்தல்னு நாட்டோட முக்கிய பிரச்னைகளை கதைக் களமாக்கி னது ஒகே. ஆனா எங்க தப்பு நடந்தாலும் நாச்சியாபுரம் இன்ஸ்பெக்டர் அர்ஜுனே ஓடறது என்ன லாஜிக்கோ தெரியல! முதல் பாதியில காமெடியப் போட்டு படத்தைத் தூக்கி நிறுத்தற டைரக்டர், ரெண்டாம் பாதியில ஆக்ஷனை நம்பி மோசம் போயிட்டார். விளைவு, அந்தரத்துல தொங்குது மருதமலை!

- ஜானு



# பகுத்தறிவுக்கு எட்டாத பத்து விஷயங்கள்

1. பனிக்காலம் வந்தால் உலகின் ஒரு துருவத்திலிருந்து மற்றொரு துருவத்துக்குப் பத்திரமாகப் பறந்து போய், பறவைகள் தங்கள் வாழ்க்கையைத் தொடர்வது எப்படி? பல்லாயிரம் ஆண்டுகளாக லயம் தவறாமல் இந்த விந்தை நிகழ்கிறதே?

2. விண்ணையும் மண்ணையும் அரித்தெடுக்கும், வடிகட்டிக் கண்கள் கொண்ட ஆயிரக்கணக்கான செயற்கைக் கோள்கள் இருந்தும் ஆழிப் பேரலை அடிக்கும் என்று தெரியாமல் போனது எப்படி?

3. சென்னையிலும், அதன் சுற்றுப்புறங்களிலும் மழை பெய்யும் என்று துல்லியமாக வானிலை ஆய்வு மையம் அறிவிக்கிறபோதே மழை லீவ் எடுத்துக் கொள்வது ஏன்?

4. ஒரு மொட்டு பூவாகிற கணத்தை அறுதியிட்டுச் சொல்ல முடியாதது ஏன்?

5. சிசேரியனுக்குத் தேதி அறிவித்துவிட்டு டாக்டர்கள் தியேட்டரைத் தயார் செய்யும் நேரத்தில், சிக்கல் என்று சொன்ன கர்ப்பம், சுகப் பிரசவமாக மலர்வது எவ்வாறு?

6. பிறக்கிறபோதே கணிதம், சங்கீதம் சம்ஸ்கிருதம் போன்றவற்றில் சில குழந்தைகள் மேதைகளாக இருக்கிறார்களே?

7. எவ்வளவுதான் கற்றுத் தந்தாலும் பெரும்பான்மையானவர்களுக்குக் கவிதை படைக்க வருவதில்லையே!

8. எல்லாவற்றுக்குமே மரபுக்கூறு அமைப்புதான் காரணம் என்றால், அந்த அமைப்பு எல்லோருக்கும் மிலிட்டரி யூனிஃபார்ம் போல் ஒரேமாதிரி இராமல் எண்ணற்ற வகைகளில் மாறுபடுவது எதனால்?

9. பகுத்தறிவு தளபதிகளாகத் தங்களைப் பிரகடனப்படுத்திக்கொள்ளும் தலைவர்கள் எந்த வகையிலும் பகுத்தறிவுக்குட்படாத திரைப்படங்களைப் பார்த்து, மகிழ்ந்து பாராட்டும் தெரிவிக்கிறார்களே?

10. அதே தலைவர்கள், மக்களின் மனசுக்குள் வாழும் மெய்யான கடவுளை மட்டும் அவர்கள் புண்படும் அளவுக்கு நிராகரித்து, ஆத்திகத்தையும் ஆத்திகர்களையும் அவமானப்படுத்த இவர்கள் ஏன் ஆவல் காட்டுகிறார்கள்?

**ஆசிரியர் பக்கம்**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.